# ஸ்ரீ வாசவி ஜனனம்

(அன்னை ஸ்ரீகன்னிகாபரமேஸ்வரியின் புராண வரலாறு)

எழுதியவர் : **கே. ஜி. கோபால்**

**" This Book is Published with the Financial Assistance of Thirumala Thirupathi Devasthanams under their scheme aid to publish Religious books"**

# ஸ்ரீ வாசவி ஜனனம்

(அன்னை ஸ்ரீ கன்னிகா பரமேஸ்வரியின்
புராண வர்லாறு)

கே. ஜி. கோபால்

வெளியீடு :

ஜி. கே. ஷெட்டி, B.Sc., B.E. Fiv. Fie.
நிறுவனர் தமிழ்நாடு ஆரிய வைசிய மகா சபா
G. K. House.
37, காலேஜ் ரோடு, சென்னை-600006

# சமர்ப்பணம்

பிரபஞ்சங்களையும் ; அண்டங்களையும் பலகோடி உயிர்களையும் படைத்து காத்து ரக்ஷித்து வரும் கலியுக கண்கண்ட தெய்வம். அருள்மிகு திருமலா திருப்பதி தேவஸ்தானத்திற்கு கோவிந்தனின் பத்ம பாதங்களுக்கு, ஸ்ரீ வெங்கடேசப் பெருமானின் திவ்ய பாதகமலங்கட்கும் இந்நூலை சமர்ப்பணம் செய்கிறேன்

அகிலாண்ட கோடி பிரும்மாண்ட நாயகனை ஸ்ரீ வேங்கட நாராயணனுக்கே இந்த நூலையும் என் ஆத்மாவையும் சமர்ப்பணம் செய்கிறேன்.

வேங்கடவன் அடிமை
**கே. ஜி. கோபால்**

மல்லப்பாடி.
தருமபுரி மாவட்டம்
T.N.

# ஜி. கே. ஷெட்டி,

நிறுவனர்,

தமிழ்நாடு ஆரிய வைசிய மகாசபா அவர்களின்

## வாழ்த்துரை :

மல்லப்பாடி திரு கே. ஜி. கோபால் அவர்களால் எழுதப்பட்ட நமது குலதெய்வம் ஸ்ரீ வாசவி கன்னியகாபரமேஸ்வரி தேவியின் புராண வரலாறு மிகவும் சிறப்பாக அமைந்துள்ளது.

நமது அன்னையின் புனித ஜனனம், அவரது தேஜஸ் குரு குல வாசம் – மங்கைப் பருவம்- பின் விஷ்ணுவர்த்தன மன்னன் வாசவி அன்னையை கண்டு-மோகித்து திருமணம் செய்விக்க தூது அனுப்பல் - அந்த நீச மன்னனுக்கு வாசவியை தர குசும சிரேட்டி மறுப்பு- அப்போது நம் அன்னையின் அருள்வாக்கு எல்லா யுத்தங்களிலும் ஜெயிப்பவர் பகவான் தான் - ஆகவே விஷ்ணுவர்தன மன்னன் நமமை ஒன்றும் செய்ய இயலாது என அன்னை தைரியமூட்டல் விஷ்ணுவர்தனன் படைகொண்டு அன்னையை சிறையெடுக்க துணிதல் - ஆனால் வைசிய இன 102 கோத்திரத்தாரும் அன்னையுடன் அக்னிப்பிரவேசம் செய்தல் விஷ்ணுவர்தனின் ஆணவம் அடங்கல்.

அன்னையின் விஷ்வரூபம் பின் விஷ்ணுவர்தனன் அன்னையின் ரூபம் கண்டு வணங்கி மன்னிப்பு கோரல் விருபாட்சன் பட்டம் கட்டல் - இப்படி வாசவி தேவியின் வரலாற்றை மிகவும் சிறப்பாக எழுதியுள்ள திரு கே. ஜி. கோபால் பாராட்டுதற்கு உரியவர்.

இத்தகைய புனித வரலாற்றை எழுதிய திரு கோபால் சகல சௌபாக்கியங்களுடன்- நீண்ட ஆயுளும் பெற்று மேலும் மேல் நல்ல பல நூல்களை எழுதி வைசிய இனத்துக்கு சேவை செய்ய வாழ்த்துகிறேன்.

G. K. ஷெட்டி

## பிருத்விராஜ் செட்டியார்,

குருக்ஷேத்ரா டெக்ஸ்டைல்ஸ்,
அம்மன் சன்னதி, *மதுரை.*

அவர்களின் வாழ்த்துரை ;

நமது குல விளக்கு வைஸ்ய குலரத்னம் K. G. கோபால் அவர்கள் நமது அன்னையின் குல தெய்வத்தின் வாழ்க்கை புராணத்தை தமிழில் எழுதி அதற்கு திருமலை தெய்வத்தின் அருளையும், நிதி உதவியையும் பெற்றுள்ளார்.

எத்தகைய உயர்ந்த நற்பேறு! நம் K. G.கோபால் இதுபோல் இறைமை நூல்களை எழுதி, எழுதி இறைவனின் ஆசிகளைப் பெற்று வாழ்வாங்கு வாழ வளமுடன் வாழ ஸ்ரீகன்னிகா பரமேஸ்வரியைப் பிரார்த்திக்கிறேன்.

(ஒப்பம்) **பிருத்விராஜ்**
மதுரை மாவட்ட ஆர்ய வைசிய
மகாசபாத் தலைவர்,
17/1 மகால் 4-வது தெரு,
**மதுரை.**

# T. வெங்கடேசலு செட்டியார்,

Ex. தலைவர்,

**காட்டாகரம்** ஊராட்சி,

பருகூர் ஒன்றியம், தருமபுரி மாவட்டம்.

அவர்கள் வாழ்த்துரை :

என்னருமை நண்பரின் இப்புனித காவியத்திற்கு நான் வாழ்த்துரை வழங்குவதில் பெருமை கொள் கிறேன். நம்வைசியக் குல தெய்வத்தின் வரலாற்றை எவ்வளவு அழகாக எழுதியுள்ளார் K. G. கோபால் அவர்கள். இவரை நான் புகழ்வது என்பது வைரத் துக்கு புகழ்ச்சி செய்வது போல! கோபால் கோகினூர் வைரம்! வைசியர்களுக்கே இவரால் பெருமை! நான் மிகவும் பெருமிதப்படுகின்றேன்.

வாழ்க இவர் புகழ்'

(ஒப்பம்) T. வெங்கடேசலு செட்டியார்

ஜவுளி வியாபாரம்,

சந்தூர். கிருஷ்ணகிரி வட்டம்

தருமபுரி மாவட்டம்.

வைசிய செம்மல்

# P. V. R. பஞ்சரத்னம் செட்டியார்,

ஸ்ரீ ராமா ஆயில் மில்ஸ்,

*ராசிபுரம்* சேலம் மாவட்டம்.

அவர்கள் வாழ்த்துரை :

திரு K, G. கோபால் நம் குல தெய்வத்தின் கதை எழுத கலியுக வைகுண்ட வாசன் ஸ்ரீ வெங்கடேச பெருமான் அதற்கு நிதி உதவி தர " சபாஷ் "

பொன்னாபரணத்திற்கு வைரத்தின் இழைப்பு! கோபால் அஸ்ட ஐஸ்வரியங்களும் பெற அந்த மால வனை வேண்டுகிறேன்.

(ஒப்பம்) P.V.R. பஞ்சரத்னம் செட்டியார்.

# ஸ்ரீ வாசவி ஜனனம்

## அத்தியாயம் ஒன்று

மேருமலையை நிகர்ந்த உயர்ந்த மரங்களும். தேன்சொரியும் மலர்களும், கண்களுக்கு விருந்து பயக்கம்இயற்கை காட்சிகளும் நிரம்பி மக்களின் மனதில் கொள்ளை கொள்ளும் 'நைமிசம்' என்ற ஒரு காடு இருந்தது. அக்காட்டிலேயே தவசீலர்களும், புண்ய மூர்த்திகளும், ஞானிகளும் — யோகம் கல்வி முதலிய பயிலும் சீடர்களும் நிறைந்து வாழ்ந்தனர். அப்படிப்பட்ட தபோவனத்திலே அழகுற அமைந்த ஆசனத்தில் அமர்ந்திருந் தார் சூதமா முனிவர். இவர் வியாசரின் பிரதமசீடர் எல்லையற்ற தவ வலிமையும், அருள் வலிமையும், இத்தகு மாமுனியை இதர மகாயோகிகள் அன்புடன் வணங்கியபடி கேட்டனர்.

அன்பும் தவ வலிமையும் கொண்ட பெரியீர்! ஆழி சூழ்ந்த இப்புவியில் வாழும் பல்லாயிரம் உயிர்கட்கும் அன்னத் தைக் கொடுத்து ஆவினத்தைக் காத்து தர்மத்தைப் பெருக்கி ஞானத்தை வளர்க்கும் வைசியப் பெருமக்களின் குலப்பெருமை நாங்கள் அனைவரும் கேட்டு மகிழும்படி எங்கட்கு திருவாய் மலர்ந்தருள வேண்டும்! ''

இதைக்கேட்ட சூதமாமுனிவர் '' நான்கு வேதங்களையும் ஆகமங்களையும் இதிகாசங்களையும் நம்மிடம் கேட்ட நீங்கள் இப்போது தர்ம புத்திரர்களான வைசியர்களின் விருத்தாந்தங் கள் தங்களை கூறும்படி கேட்டது நமக்கு எல்லையற்ற மகிழ்ச்சி

உண்டாக்குகிறது. இதோ ஈண்டு கூறுவோம்! என்று தம் குருவாகிய வேதவியாசரை பிரார்த்திவிட்டு கூறத் தொடங்கினவர்.

'வைசிய' என்ற சொல் ' விச ' என்ற சப்தத்தால் உண்டாகியது. ஆகவே விசர்களே வைசியர்கள் என்று சொல்லப்பட்டனர், இவ்வைசியர்கள் வேதபாராயணமும் நல்லொழுக்கமும், நன்னடத்தையும், ஈகையும், கல்வியும், செல்வமும், நற்குணங்களும் விசாலபுத்தியும், கொண்டு விளங்கினார். தாம் வாழும் ஊரிலே தம் வாணிபதலத்திலே தக்க கௌரவத்துடன் வாழ்ந்தனர். எக்குலத்தோரும் அவர்களை மதிப்பர். எஞ்ஞான்றும் சத்தியத்தையும், மானத்தையும், தர்மத்தையும் ஆசார சீலத்தையும், அவர்கள் கைவிடத் துணியமாட்டார்கள், தர்மம் நம்மை அந்த ஈசன் படைத்தான்! என்ற மகா லட்சியத்துடன் வாழ்ந்தனர் அப்பெருமக்கள். அப்படிப்பட்ட புகழுடைய நற்குலத்திலே அன்னை ஆதிபராசக்தியே திருவவதரித்த தன் காரணத்தால் அம்மரபினரின் பெருமை ஈடு இணையற்று விளங்கியது. ஈண்டு அன்னை பராசக்தி ஜனித்த அந்த வரலாற்றை கூறுகிறேன்- கேட்பீர்களாக! என்று சூதமாமுனிவர் தொடர்ந்தார்......

' ஓம் ' என்ற நாதத்தின் சிறப்பை உணர்த்தும் நம் நாடு ஞானிகளும், தர்மசீலர்களும் பக்த கோடிகளும், தியாகிகளும் வீரர்களும், மகாகவிஞர்களும் தோன்றி புகழுடன் விளங்குவது இப்பாரத கண்டத்திலே கலை விற்பன்னரும் மாமேதைகளும் புகழும் ஆந்திரா தேசத்திலே கோதாவரி மாவட்டத்திலேபிரக்தரி என்ற மலை உள்ளது.

அம்மலையிலே எண்ணற்ற மரங்களும், சிறந்த மூலிகைகளும் நிறைந்து விளங்குகிறது. இரண்டாக உடலை துண்டிக்கப்பட்டாலும் அதை ஒன்று சேர்க்கும் அதி அற்புத மூலிகையான சந்தான கரணி போன்ற பல்வகை மூலிகைகளும் கொண்டு விளங்கும். அங்கே அழகான பல அருவிகள் இறங்கி வருவது மிகவும்

எழிலுடன் இருக்கும். அதை நோக்குங்கால் பக்தியில் சிறந்த பக்தர்கள் இறைவனை நினைத்து, பின் அவனது திவ்யதரிசனம் கண்டு பக்தி பரவசமாகி கண்களில் ஆனந்தக் கண்ணீர் பொங்க அது பூமியை நோக்கி ஓங்காரத்துடன் பவனி வருவதைப் போல் உள்ளது. இம்மலையின் இரண்டு பக்கங்களிலும் எண்ணிறந்த இயற்கைக் காட்சிகள் கண்களைக் கவரும்.

இங்கு உற்பத்தியாகும் கோதாவரி என்ற புண்ணிய நதி வள்ளல்கள் தரும் கொடைகள் போல ஆங்காங்கே உள்ள ஏரி குளம் குட்டைகள் நிரப்பிக்கொண்டே போய் புண்ணிய சீலர்கள் பரமாத்மாவை ஐக்யமாவது போல் பெரும் சமுத்திரத்திலே சென்று சங்கமமாகும். அந்நதிக்கரையில் உள்ளது தான் பெனுகொண்டாபுரி என்ற திருநகரம்.

பிருத்விமலையையடுத்து கோதாவரி நதிக்கரை மீது உள்ள இத்திருநகரம் அழகு, அமைப்பு, உயர்வு, வனப்பு, செல்வம் கீர்த்தி முதலியன பெற்று பார்ப்பவருக்கு பெரிய மலையைப் போல தோன்றுவதால் பெரியமலை என்று பொருள் கொண்ட ஆந்திர பதமாகிய பெனுகொண்டா என்று பொலியலாயிற்று

இங்கே மாடமாளிகைகளும், கூடகோபுரங்களும் அரச மண்டபம், அத்தானி மண்டபம், கல்வி மண்டபம், வேத மண்டபம் போன்ற மண்டபங்களும், உப்பரிகைகளும், பல வண்ண ஒளி விளக்குகளும் நிறைந்து இந்திரனின் தலைநகரையும் மிஞ்சக் கூடிய அழகாக அமைந்திருந்தது.

மேலும் வைகுண்டவாசனும், ஏற்றதை எழில் பொங்க செய்து தருபவனும், கீதையின் நாயகனும், சங்கு சக்ரதாரியான கோதண்ட பஞ்சாயுதபாணியாக ஸ்ரீ பூதேதவி சகிதம் எழுந்தருளியுள்ள ஸ்ரீ நாராயணமூர்த்தி 'ஜனார்தனசாமி' என்னும் திரு நாமத்துடன் கோயில் கொண்டுள்ளார்.

இத்தகைய அருள்மிகு ஆலயங்களில் ஆறுகாலமும் பூசைகளும் புனஸ்காரங்களும் ஆகமவிதிப்படி செவ்வனே நடைபெறும். மேலும் இந்நகரில் உழவர்களின் பாடல் ஓசையும், நெல்மூட்டைகளை வண்டியிலேற்றும் ஒளிமம், தான தர்மங்களைப் பெற்றுச் செல்பவர் வாழ்த்தும் ஒலியும், விருந்தினர்கள் உபசரிக்கும் ஒலியும், நான்கு வேதங்கள் முழங்கும் ஒலியும், சுப சடங்குகள் நடத்தும் மங்கலவாத்திய ஒலியும் கலையும் சேனா வீரர்களின் நடந்து செல்லும் மிடுக்கான ராணுவ நடை ஒலியும், வீதிகள் தோரும் ஏதாவது விழாக்கள் நடைபெறும் ஒலியும் இந்தத் திருநகரம் பெனுகொண்டாவில் நாள்தோறும் முழங்கிக்கொண்டே இருக்கும்.

இத்திருநகரின் வளத்தையும் செல்வத்தையும் அறுதிவிட்டே கூற இயலாது. சிறுவர்கள் விளையாட நவரத்தினங்களும் பசும் பொன்னும், முத்தும், யானைத் தந்தத்தாலும் செய்யப்பட்ட சிறு தேர்களை தெருக்களில் உருட்டிக் கொண்டே செல்வார்கள் அத்தகு வளம் கொண்ட திருநகர் தான் பெனுகொண்டாபுரி பட்டினம்.

இத்திருநகரிலே மற்றொரு பக்கம் அழகிய இளம்பெண்கள் கனிஹூறும் பட்டாடைகளும் நவரத்ன ஆபரணங்களும் அணிந்து ஜனதானசாமியின் திருக்கோயிலை அடைவர். அங்கு தூப தீப ஆராதனைகள் செய்து வைகுண்ட வாசனை பல விதங்களில் துதிப்பார்கள்.

'பரந்தாமா ! ஆதிமூலமே என்று நின்னை அழைத்த யானை முதலையின் பிடியிலிருந்து காத்தவனே, சாந்த சக்குபாய்க்கு முக்தியளித்தவனே, ஜனார்த்தனா, அபலை மீராவைக் காத்தவனே, பாஞ்சாலையின் மானத்தைக் காக்க தென்றல் வடிவமாக வந்தவனே; கீதையின் நாயகனே பண்டரிபுரத்திலே 'கிடோபா' என்று செங்கல்லின் மேல் நின்று காட்சியளிப்பவனே அக்கிரமங்கள் நடக்கும்போது அதை களைய பிறவி எடுப்பவனே

தாமோதரா 'சீனிவாசா கேசவா முகுந்தா, பத்மநாபா நந்த நந்தனா, முராரி, வனமாலி, —எங்களைக் காத்து இம்மையி லும், மறுமையிலும் ரட்சிப்பீர் ஐயா, முரளீதரா! இப்படி கண்க ளிலே நீர்மல்க உள்ளம் உருக பிரார்த்திப்பார்கள் அந்த இளம்பெண்கள்.

பிறகு தம் இல்லங்கள் சென்று வீடுகளைத் தூய்மைப் படுத்தி தொழுவத்தைக்கழுவி பக்தியுடன் கோபூசை செய்வர். பசு அனைத்துப்பிறவிகளும் மிகவும் உயர்வானது. அதுதெய்வீக்க காமதேனுவின் அம்சம், மகாலட்சுமியின் மறுபிறவி' அதன் மூத்திரம் கங்கையின் அம்சம். வயிறுபூதேவியின் அம்சம் முலை' பாற்கடலின் அம்சம். அதைபூஜித்து வணங்குவதால் மும்மூர்த்திகளை வணங்கிய புண்ணியம் சேரும்.

மேலும் பெனுகொண்டாபுரி மக்கள் அடுப்பை பசும் சாணத் தால் மெழுகி அடுப்பு மூட்டி உலையேற்றி (தமக்காக மாத்திரம் உண்பவர்கள் பாவத்தையே உண்கின்றனர் என்று பகவான் கீதையில் கூறிவுளதால்) அத்தியருக்கும் சேர்த்லு பதார்த்தங் களை சமைப்பர்.

தவிர ஆண்களில் முதியோர் தம் வீடுகளில் உள்ள கிணற்றில் நீராடி நியமத்துடன் தோய்த்த வஸ்திரங்களையணிந்து பூசை யறைகருள் விடியுமுன் வந்து எல்லாம் வல்ல இறைவனை பக்தி வினயத்துடன் ஸதோத்தரிப்பர். யுவர்களோ கோதாவரி தீரம் சென்று நீராடி அபிஷேகத்தீர்த்தம் கொணர்ந்து புஸ்பங்களு டன் பூசையில் ஈடுப்படுவர் இத்தகு உத்தமமான பெருமக்களை கொண்டது தான் பெனுகொண்டாபுரி பட்டிணம்!

பெண்கள் துளசிமாடம் சென்று துளசி பூசை செய்வர் துளசி தீர்த்தம் உண்டதும் தம் வேலைகளைக் கவனிக்கச் செல்வர். துளசி சகல நோய்களையும் தீர்க்கும் சஞ்சீவி அதன் காற்று தீர்க்கயுளைத் தரவல்லது. ஆகவே அந்நாளில் ஒவ்வொரு வைசி யர் இல்லத்திலும் துளசி பிருந்தாவன பூசைகள் நடைபெறும்,

பின் சிறிது நேரம் வேதங்கள் ஆகமங்கள், பகவத்கீதை, புராண இதிகாசங்கள் பாராயணம் செய்வர். அப்போது மனம் அதிலே ஈடுபட்டு தெய்வபக்தியும் ஆத்மசுத்தியும் ஏற்பட்டு ஆனந்தக் கண்ணீர் ஏற்படும் அத்தகைய உன்னதக் காட்சிகள் எடுத்தியம்பல் மிகவும் அரிதாகும்.

பிறகு பகவானுக்கு அர்ப்பணம் செய்துவிட்டு அறுசுவையான திவ்யாப் பிரசாதத்தை ஆடவருக்கு பெண்கள் அன்புடன் பரிமாறுவர் பரிமாறும் போது இந்த மகா பிரசாதம் பரந்தாமனுக்கு நிவேதம் செய்துவிட்டு தங்கட்குப் படைக்கிறேன். இது பரிபூரண சுவையுடன் இருக்கும்படி பரந்தாமன் அனுக்ரணம் பண்ணுவார் அடியேன் சமைத்த இந்த பிரசாதத்தை ஏற்று என்னை ரக்ஷிக்க வேண்டும்!' என்று ஆடவர்களைப் பிரார்த்தித்து உணவுபடைப்பர் இல்லத்தரசிகள்!

பிறகு ஆடவர்கள் தமது தொழில்கள் செய்ய செல்வர் மளிகைகள், ஜவுளிக்டைகள், கண்ணாடிக்கடைகள், பாத்திரக்கடை இரும்புக்கடை, பொன்னாபரணக்கடை, நவதான்யக்கடை, நவரத்னக்கடைகள் முதலிய பல வியாபாரங்களை செய்துபெரும் பொருள் ஈட்டினர் வைசியர்.

அநீதி, அதர்மம் துர்பாஷை முதலியன நீக்கி சத்திய தர்ம வாழ்க்கையையும் நேர்மையான தொழில்களையுமே செய்தனர் வைசியத் திலகங்கள் பிச்சையிட ஆளிருப்பார்! பிச்சை எற்க ஆலில்லையே! என ஏங்குவர். வைசியப் பெண்கள் யாழ் வீனை முதலிய இசைக்கருவிகளை இசைத்து நுண்கலைகள் யாவும் கற்று அதன் மூலம் மகிழ்வும் இன்பமும் தம் ஆடவர்க்குத் தந்தனர்.

கோதாவரி நதிக்கரையில் உள்ள இந்தப் பட்டினம் பெனுகொண்டாபுரி சமுத்ரம் சங்கமம் ஆகும் இடம் ஆகவே இந்நகர வைசியயர்கள்

கப்பல் வியாபாரம் செய்து கோடி கோடியாகப் பொருள் ஈட்டினர். மாடமாளிகைகளுக்கும், கூடகோபுரங்களும், அஷ்ட ஐஸ்வரியங்களும் பெற்று ஆனந்த வாழ்வு நடத்தினர்.

எத்தொழில் செய்யினும் சொற்ப லாபமே வைத்தனர். லோகோபகாரம் செய்யவே வைசியராகிய நம்மை பரமாத்மா ஜனித்துள்ளான் ஆதலால் அவனது திருவுள்ளப்படி மனச்சாட்சிக்கு விரோதமின்றி நேர்மை வாழ்வு நடத்தி நம் உடல், பொருள், ஆவி அத்தனையும் சமர்பணம் செய்து அவன் பாதார விந்தங்களையடைவோம் என்ற மகா உன்னத இலட்சியத்திலே திகழ்ந்தவர் அம்மக்கள்!

சிறு வியாபாரி, பெரியவியாபாரி, பிரபல வியாபாரி என்ற வித்தியாசமின்றி படோடாபம் பொறாமை, வீண் செலவு நீக்கி நிஷ்களங்கராக வாழ்ந்தனர் அம்மக்கள். இத்தகைய வைசிய சிரேட்டர்கள் வாழ்ந்த 'பெனுகொண்டாபுரத்தில் அதைச் சுற்றிலும் பதினொன் புரங்கள் (ஊர்கள்) இருந்தன. பாலுகொகிலு கண்டசாலா, ஆளண்டி, தன்தபுரம், விசாகப்பட்டணம், தர்ம பட்டிணம், 'பெத்தனூர், ஏலப்புரம், மும்மிடி, சிவப்பட்டணம், நகரவீடிகா, பாஞ்சாலபுரம் நரசிம்மபுரம், வீரநாராயணபுரம், ஜகந்நாதபுரம். நிரவத்தம், கலிங்கப்பட்டினம் என்ற பதினெட்டுபட்டினங்கள். மிகவும் சிறப்புடன் ஸ்ரீ பரந்தாமன் புகழைப் போல சிறந்து விளங்கியது.

மன்னுயிரைத் தன்னுயிர்போல் எண்ணி; தன்னாலும் பிறஜனத்தாலும், பகைவராலும், கள்வராலும் துஷ்டமிருகங்களாலும் வேறு எவற்றாலும் தீங்கு நேராத வண்ணம்; இறைவனது திருவருளால் அந்த பதினெட்டினங்களையும் அதன் தலைநகரமாகிய பெனுகொண்டாபுரியையும், அரசாட்சி புரிந்து வருகின்ற மகானுபாவரும் வைசிய குல உத்தமராகிய குசும சிரேட்டியார் என்பவர் தமது பத்தினியராகிய குசுமாம்பிகை என்னும் அம்மையுடன் இல்வாழ்வு இனிது நடத்தி இராஜ அரண்மனை, சகல போகங்களுடன் அப்பெனுகொண்டாபுரி பீடுறத்திகழும்.

# அத்தியாயம் இரண்டாம்

## வேள்வியும் மகப்பேறும்.

ஒரு நாள் உலகம் புகழும் உத்தம குணம் கொண்ட மன்னரரகிய குசுமசிரேட்டியார் தம் மனைவியிடம் பேசிக்கொண்டிருந்தார் தமக்கு இதுநாள்வரை சந்தான பாக்கியத்தை இறைவன் தரவில்லையே என்று குசுமாம்பாள் கண்ணீருடன் கேட்டாள்! அதன் காரணமும், அதை நீக்க பரிகாரமும் விரைவில் காண தனது நாயகனை வேண்டினாள் அம்மங்கையர்கரசி!

'சிரேட்டியாரோ, தேவி நாம் இதற்காக காசி முதல் கன்யாகுமரிவரை க்ஷேத்ராடனம் செய்தோம். குருகுலவாசம் முடித்து சமரவர்தனம் என்ற விரதமும் அனுசரித்தோம். எவ்விதப்பயனும் இல்லை. ஆகவே பரந்தாமன் அனுக்கிரகம் செய்யும் வரை நாம் பொறுமையைக் கடைபிடிக்க வேண்டும். நாளை ஆன்றோர்களை அணுகி யோசனை கேட்போம் என்று கூறினார்,

அடுத்தநாள் அறிவிலும் ஞானத்திலும், ஒழுக்கத்திலும் வாய்மையிலும் சிறந்து நான்கு மறைகளும் கற்றுணர்ந்து, கலைகள் யாவும் கசடறக்கற்று வித்தகராக விளங்கும் ஆன்றோர்களையும் தம் சபைக்கு எழுந்தருளச் செய்தார். பின்பு குசுமசிரேட்டியார் எழுந்து பவ்யமாக வணங்கி வாய்மையும் ஞானமும் கல்வியும் கொண்ட பெரியீர் ! உங்கள் தூய்மையும் தன்மையும் நேர்மையும் அன்பும் புகழும் நமது சபையை கௌரவிக்கப்படுகிறது ஐயன்மீர் ! எனக்கு ஒருபிரச்சனை எழுந்துள்ளது.

புத்திர சுகமில்லாதவர் 'புத்' என்ற நரகத்திற்கு ஏகுவர் என்று ஆகமங்களும் சாத்திரங்களும் கூறுகின்றன. அப்படியான் எம் துணைவியுடன் ஆந்நரகத்திற்கு ஏகாதவாறு. எமக்கு சந்தான பிராப்தியை பெற தேவரீர் வழியொன்றை பகர்வீர்களாக ! என்று கண்களில் நீர் சேர கைகூப்பி விண்ணப்பித்தார்.

அதுகேட்ட அவ்வைசியப் பெரியோர் ஒரு உண்மையை குசும சிரேட்டியாருக்கு விளக்கினார்கள் ,, வைசியர் குலத்திலகமே ! கம்பநாட்டரால் புகழ்பெற்ற தசரத சக்ரவர்த்தி கோசல நாடு ஆண்டகாலத்தில் அவருக்கு மகப்பேரு இல்லை அதனால் மிக வும் மனங்கசந்து தம் குல குருவாகிய வசிட்டரை அணுகிஸ்வாமி இதற்கு வழி இல்யைா ? எனக்குபுத்திர பாக்கியம் இனி இல்லை யா? என அரற்ற அவர் 'ராசாதி ராசா, புத்திர காமேஷ்டி யாகத்தை குறைவின்றி செய்தால் உன் மனக்கவலை நீங்கும் ! என்று யோசனை கூற தசரதர் அந்த யாகத்தை செய்தார். அதன் பலனாக ஸ்ரீ ராமர், லட்சுமர், பரதர், சத்ருகன், தோன் றினர் அன்றோ? ஆதலால் சத்திய நெறிகொண்ட மன்னர் பெரு மானே, நீரும் அந்த மாபெறும் வேள்வியினை குறைவற செய்து மகப்பேற்றினை அடைந்து அகிலம் போற்றும் நன் மக்களைப் பெறுவீராக! என்று அவர்கள் பகர்ந்தனர்.

அப்படி யாவும் செய்வோம் என்றுகுசுமசிரேட்டியார்பகர்ந்தார் யாகத்திற் வேண்டிய அனைத்தையும் சரி செய்து ஒரு சுபயோக சுபதினத்தில் பஞ்ச உஷக் காலத்தில் குசுமசிரேட்டியும் குசுமாம் பாளும் நீராடி மடியுடுத்தி யாகசாலை சேர்ந்து ஆசார சீலர்க ளையும், வேதாந்த வித்தர்களையும் மகா தபசிகளையும் துணை கொண்டு நற்சுப வேளையில் கிழக்கு முகமாக அமர்ந்து அந்த மகாயாகத்தை ஆரம்பித்தார்.

இப்படி வேதவிதிப்படி பக்தியுடன் வெகு சிரத்தையாக யாகத் தை நடத்தி வருகையில் நெய்யை யாக குண்டத்தில் ஊற்றிய தால் யாகாக்னியில் திருமாள், பிரும்மா, ருத்ரர்களின் அம்சமும்

அஷ்டதிக்குப்பாலர்கள், சப்த ரிஷிகள், யஷர், கின்னரர், கிம்பு ருடர்கள், கந்தர்வர், சித்தர், பூதகனங்கள், பரதிவாஜர் காசி, வசிட்ட விசுவாமித்திர கௌதம வால்மிகி அகத்திய சுக சௌகாதி ரிஷிகளும் ஆண்டு திங்கள் வளம் திதி முதலியவற்றின் ஆதி தேவதைகளும் யாவும் மனமகிழ்வுடன் வேள்வியினை கண்குளிர கண்டு ஆனந்தித்து எல்லா அம்சமும் பொருந்திய இக்குசும சிரேட்டியாரின் மனக்குறை கூடாது இவர்களின் குறையாகிய மகவிலாக்குறை தீர்ந்து புத்திரப்ராப்தியடைந்து பொலிவுறக் கடவது என்று வாழ்த்தினார்!

வேள்வியால் பாவனை செய்யப்பட்ட தேவர்கள் 'நீவீர் விரும்பிய போகங்களை எல்லாம் தருவர். எங்கும் நிறைந்த பரம் பிரும்மம் என்றும் நான் ஹோமம்! நான் பாகம்! நான் ஸ்வதர்! நான் நெய்! நான் அவிர்! நான் ஓம் என்ற எழுத்து நானே தலைவன்! என்று கீதையில் உரைத்த அந்த பரப்பிரும்ம சொருபனான பரந்தாமன் கண்ணன் பஞ்ச பூதவடிவாய், சர் வாத்மா சொருபனாய் அருட்சக்தி சகிதமாய் அனுகிரகம் புரியும் ஆதி மூர்த்தியாய் கிருபா சமுத்திரமாய் வணக்கும் சர்வேஸ்வரன் அந்த யாகாக்னியின் கண்ணே ஆர்பவித்து அன்பே வடிபாய் அற நெறி ஒம்பும் குசுமசிரேட்டியாருக்கு சகல மங்களமும் புத்ர பாக்கியமும் சித்திக்கும்படி ஆசீர்வதித்தார்.

மண்ணும் விண்ணும். இந்த புனித யாகாக்னியைக்கண்டு ஆனந்தத்தால் திளைத்தன. அச்சமயம் யாகக்குண்டத்திலிரு ந்து அக்னி வானவீதி வரை சென்று மின்னல் ஒளியைப் போல் ஒரு திவ்ய ஒளி தோன்றி ஒரு மாகபுருஷர் சொல்லவொண்ணா தேஜஸுடன் பாயசம் நிறைந்த ஒரு பொற்பாத்திரத்தை தமது திமது திருகரத்தால் தாங்கியவராய் தோன்றி அதைக் குசும

சிரேஷ்டியாரிடம் தந்து இப்பாயசத்தைஉமது தர்மபத்தினியிடம் ஈந்து அருந்தச் செய்யின் மகப்பேறு உண்டாகும் என்று கூறி மறைந்தார் வான வீதியில் துந்துபிகள் முழங்கியது தேவர்கள் புஷ்ப மாரி பொழிந்தனர்.

பாயசத்தைப் பெற்ற குசும சிரேஷ்டியார் எல்லையில்லாத மகிழ்வுடன் தமது துணைவியிடம் ஈந்து அதனை உண்ணச்செய் தார் சகலதேவர்கள் தங்களது ஹோம அவிகளை ஏற்று குசும சிரேட்டியார் தம்பதிகளை ஆசீர்வதித்தனர், இருவரும் மகிழ்ச்சி யாக இல்லறத்தை நடத்தினர். இறைவனது பெருங்கருணை குசும்ாம்பிகையின் உடலில் மாற்றம் ஏற்படுத்தியது. அவளது மனம் எல்லையற்ற மகிழ்ச்சியில் விம்மியது. இம்மாற்றம் நல்ல அறிகுறியாகப் பட்டது அவள் கருத்தரித்தாள், கூடிப்பிரிந்த நங் கையின் குரல் கேட்ட நாயகன் போல குசுமசிரேட்டியார் மனம் குதூகலித்தது முழு முதற்கடவுளை நன்றாகத் தொழுதார்.

இந்த மகிழ்ச்சியை விழாவாகக் கொண்டாடினார். பெனு கொ ண்டா நகரே இதை விமரிசையாகக் கொண்டாடியது' வாழை கமுகுமரங்கள் வீதியெங்கும் நடப்பட்டு. தோரணங்கள் கட்டப்ப ட்டு. கோலங்கள் இடப்பட்டு இந்திரனின் அமராவதி நகரைப் போல அழகு செய்யப்பட்டு, தான தருமங்கள் செய்யப்பட்டு பொழிவுடன் திகழ்ந்தது பெனு கொண்டாபுரி. ஏழைகட்கு பொக் கிஷமே திறந்து விடப்பட்டது!

குசுமாம்பிகைக்கு கருவுற்ற முதல் மாதத்தில் உடல்தளர்ந்தது. இரண்டாம் மாதத்தில் இடை தேய்ந்து, பால்முகம் சுரர்ந்து உணவுமேல் வெறுப்பு ஏற்பட்டு, மூன்றாம் மாதம் மதிவதனம் வெறுத்து' நான்காம் மாதம் மசக்கை உண்டாகி இவ்வாறு கர் பக் குறிகள் தோன்றி வரலாயின். நான்காம் மாதம் பும்சவனம் என்னும் கிரியை தம்உறவினர் நண்பர் புடைசூழ விமரிசையாக நடந்தன.

குசுமாம்பிகையின் தமையனார் மிகச் சிறந்த பழங்களையும் உணவுப் பதார்த்தங்கயும் கொண்டு வந்தது அவள் உண்ணு

வதைக் கண்டு மகிழ்ந்தார்.

ஆறாம் மாதம் அடிவயிறு கனத்தது. ஏழாவது மாதம் விரும்பிய உணவுவகைகள் உண்ணத்தோன்றியது. எத்திசைய அரிய பொருட்கள், தேவாமிர்தமாயினும், சரித்திரமண்டலத்து அரிய போருட்களைக் கூட அவர் நாயகனான குசுமசிரேட்டியார் வரவழைத்து அவளுக்கு உண்ணத்தந்தார். எட்டாம் மாதம் மித்திர பந்துக்கள் சூடி சீமந்தமும் விஷ்ணுபலியும் நன்முறையில் நடைபெற்றன.

குசிம சிரேஷ்டியாரின் அரன்மனை பற்பல சடங்குகளால் நித்ய கல்யாண கோலமாய் எப்போது பார்த்தாலும் ரமணியமாக எழிலிடன் திகழ்ந்தனர். நகர மக்களின மகிழ்ச்சிக்கு ஓர் எல்லையே இல்லை. பெண்கள் தங்கள் மண்ணுக்கு புத்திர பாக்யம் கிடைக்கப் பெறதற்காக ஆடல்கள், பாடல்கள், கும்மி, முதலியன நடத்தி பற்பல சுவைமிக்க சித்ரான்னங்களை, பழங்களையும், வக்ஷணங்களையும் விருந்துகளையும் பலருக்குமிட்டு தாமும் உண்டு உவந்து ஆனந்தத்தில் திளைத்த வண்ணம் இருந்தார்.

பத்து மாதங்கள் கழிந்தன. ஒரு நாளிரவு குசுமாம்பிகையின் கனவிலே ஆதி பராசக்தி தோன்றினாள். நற்குடிப் பிறந்தவளே! உன் கணவரும் நீரும் செய்த அருந்தவத்தினால் நாமே உன் திருவயிற்றியிலே ஜனிக்கிறோ. உலகத்திலே தீய சக்திகளை ஒழித்து உண்மையையும் தர்மத்தையும் காத்து உமது வைசியரின் குலப் பெருமையை அனைவருக்கும் உணர்த்தி அருள் செய்வோம்! என்று கூறிவிட்டு மறைந்தாள் இக்கன்வை குசுமாம்பிகை தம் கணவரிடம் கூற அவர் எப்போது தர்மம் அழிந்து அதர்மம் காக்க! என்று பகவான் கண்ண பெருமாள் கீதையிலே அருளியுள்ளார். துஷ்ட நிக்ரகம் சிஷ்ட பரிபாலனம் பரம்பொருள் அவதரித்து-காப்பது-அதுவும் நம்வயிற்றிலே அவதப்பது நமது மகாமாபயம்-முன் பிறவிகளில் செய்த பாவத்தின் பயன்கள் என்று ஆனந்தப்பட்டார்.

பன்னிரண்டு மாதங்கள் உல்லாசமாக கழிந்தன. அனைத்து உயிர்களும் ஆனந்தம் அடையவும், தரணியெங்கும் பசுமையும் மரங்களும் பெருகியும் தர்ம தேவதை ஆனந்தத்தாண்டவமாட பிரம்மா, விஷ்ணு ருத்ரதேவாதி தேவர்கள் கின்னரர், கந்தர் வர், கிம்புருடர், வானவர் முதலியோர் வானில் புஷ்பமாரி பொழித்து வாழ்த்தவும் தேவதுந்துபிகள் கணகணவென முழங்க வானம் நிர்மலமாக விளங்க.தென்றல் ரமணிகரமாக வீச, சப்த சமுத்திரங்களும் சந்தோஷமாய் பொங்க, குயில், கிளி, மைனா போன்ற பறவைகள் ஆனதந்கீதம் இசைக்க அரண்மனையில் அனைவர் உளள்ளும் மகிழ தனலட்சுமி, தான்யலட்சுமி, தைர் யலட்சுமி, வித்யாலட்சுமி, விஜயலட்சுமி, ராஜ்யலட்சுமி, சௌமி யலட்சுமி, கீர்த்திலட்சுமி ஆகிய அஷ்டலட்சுமிகளும் ஆனந்தம் மெய்தி ஆசிகள்வழங்கிட, புண்ணியங்கள் பொங்சி, பாவங்கள் மறைந்திடவும் நகர மாந்தர் அனைவரும் புளகாங்கிதம் அடை யவும் பாரத கண்டத்தின் புகழ் பாரனிலே சிறந்த விளங்கவும் பெனுகொண்டாபுரின் பெருமை பரவவும் குசும சிரேட்டியின் தர்மபத்தினியாகிய குசுமாம்பிகை அம்மைக்கு கர்ப்பம் தோன்றி குழந்தை பிறக்கும் சகுணம் இவைகள் என பெரியோர் மகிழவும், இக்குழந்தை தெய்வக்குழந்தை இது உதயம் செய் வதால் இந்நகரத்திற்கு ஒரு நற்காலம் தோன்றும் என மேலோர் உவக்கவும்-

சித்திரை மாதம் சுக்கிலபட்சம் (வைசாக சுத்த) தசமிசுக்கிர வாரம் புணர்வசு நட்சத்திரம் கூடிய சுபதினத்தில், சுபலக்னதில் குசுமாம்பிகையின் திருவயிற்றில் ஓர் ஆண்மகவும் பெண் மகவும் உதயமாயினர்.

பெண் மகவு பத்மம், பாசம் வீணை, கிளி ஆகிய இவற்றைத் தாங்கிய நான்கு திருக்கரங்களுடன் பச்சை நிறப்பட்டாடையுடன் இரத்தினாபரணங்கள், திருமுடியில் மாணிக்கக்கிரீடம் சகிதம் புன்னகை பூக்கும் திருமுகத்துடன், கருணை ததும்பும் காட்சி யுடனும் சாமுத்திரிகா இலட்சணங்களுடனும் கோடி சந்திரர் ஏக

காலத்தில் உதித்தது போன்ற பிரகாசத்துடனும் எங்கனும் ஒளி பெருக்கி விளங்கினாள்.

இந்தக் குழந்தைகளைக் கண்ட பெற்றோர்கள் அண்ட சராசரங் களையும் காத்து ரக்ஷிக்க வல்ல ஆதிபாரசக்தியின் அவதாரமே இந்தப்பெண் குழந்தை ,என்று நிச்சயித்து இரண்டு கரங்களை யும் தலைக்குமேல் தூக்கி, 'ஓ தேவ தேவி லோக நாயகி! பத் தர்க்கு கருணை காட்டும் பராபரீ! மூவுலகிற்கும் முதல்வீ, நான்கு மறைகளும் போற்றும் நாராயனி! பாவவினைகள் போக்கும் பார்வதீ! செல்வங்கள் தரும் ஸ்ரீதேவி! வேண்டும் வரம்தரும் வித்தகி! கலிதீர்க்கும் கௌமாரி! அன்னையே ஜகன் மாதா! சரணம் சரணம் நின்தாள் சரணம்! என்று கண்களில் கங்கை பொங்க கூப்பிய கரங்களுடன் ஆனத்தப்பட்டார்கள்.

அப்போது அன்னை பராசக்தி குசுமசிரேட்டியிடம், எம்மை மகளாக அடைய சென்ற பிறவியில் தவம் செய்தீர்கள் இப்பிற வியில் அதை நிறைவேற்றவே நாம் அவதரித்தோம்! என்று திருவாய் மலர்ந்தருளி தம்தெய்வீக உருவை மாற்றி குழந்தை வடிவம் கொண்டு படுக்கையில் இருந்தது. பிறகு உலக நியதிப் படி அது அழவும் செய்தது!

இதைக்கண்ட அனைவருமே நாம் இதுவரை கண்டதும் 'கேட் டதும் கனவோ நினைவோ என ஐயமுற்று ஒன்றும் புரியாது திகைத்து நின்றனர். அப்போது ஆகயாத்தில் இருந்தும் ஒரு திருவாக்கு மலர்ந்தது. ஓ வணிகர் திலகமே, சென்ற பிறவியில் நீர் செய்த தவப்பயனாலும், துட்டநிர்சகசிட்மபாலனமாக மார்த் தமாகவும், தர்மத்தையும், ஆசாரத்தையும் நிலைநிறுத்தவே இவ்வுலகில் சர்வேசுவரியாகிய நாமே உமக்கு புதல்வியாகத் தோன்றினோம். சர்வலோக நாயகனான அந்த லக்ஷ்மி நாரா ணன் அம்சமே தற்போது உமக்குப் பிறந்துள்ள ஆண் மகவாகிய தாகும், எங்களது அவதாரத்தில் உலகில் க்ஷேமங்கள் பெருகி தர்மம் தழைக்கும் என்று கூற அனைவருமே வியந்து

விம்முதமுற்று மேனி புளகம் அடைந்து பரந்தாமனான ஸ்ரீமன் நாராயணனையும் ஆதிபாரசக்தியாகிய அந்த பார்வதி தேவி யையும் புகழ்ந்து பாடினர்-ஆடினர் குசுமசிரேட்டி தம்பதிகளோ தெய்வங்களே தமது குழந்தைகளாகப் பிறந்தது குறித்து'ஆனந் தக்கடலில் மூழ்கி கரை காணாதவராயினர்!

பல்லாண்டுகளாக தவமிருந்து. யாகம் செய்து அதன் பயனாக பெற்ற மகப் பேற்றினை எண்ணி எண்ணி பெருமகிழ்வு எய்திப் குசுமசிரெட்டியார் நாட்டின் அனைத்து ஆலயங்களிலும் பூசை கள் நடாத்தவும், புதிய உற்சவங்கள் செய்யவும் தானதர்மங்கள் வழங்கவும் எல்லா அறச்சாலைகளிலும் அன்னதானம் செய்யவும் உத்திரவிட்டார். மேலும் மூன்றாண்டுகள் ஒருவரும் வரி செலுத்த வேண்டியதில்லை. ஏழாண்டுகள் பொக்கிஷத்தில் உள்ள திரவியங்கள் பெற்றுச் செல்ல எவரும் அரண்மனை வரலாம் என்று பறையறிவிக்கப்பட்டது. அரண்மனை வந்து அனைவருக்குமே அநேகவிதமான பாயச பரமான்னங்கள் விருந் தாகப் வழங்கப்பட்டது. ஆடையாபரணங்களும், சந்தன புஷ்பத் தாம்பூலங்கலும் வழங்கப்பட்டது.

அரண்மனை ராசவீதிகளில், வைசிய வீதிகளில் வாழை கமுகு கட்டி மலர் மாலைகள் தூக்கி, மலர் தோரணங்களை அலங்கரித்து சந்தனத்தால் மெழுகி பண்னீர் தெளித்து முத்துப் போன்ற சித் திரக்கதைகள் தீட்டி மணிவிளக்குகளால் அலங்கரம் செய்து அனைவரும் சர்வாலங்கார பூஷணர்களாய் ஆடையாபரணங்கள் அணிந்து, வாசனைத் திரவியங்கள் பூசி, மகளிர் குழலில் நறு மலர்கள் கட்டி, கண்களில் மையைத்தீட்டி யாழ் வீனை முதலிய இசைத்து ஆடிப்பாடி மகிழ்ந்தனர்.
சோலைக்கிளிகள் அன்னை பாரசக்தி நம் பெனுகொண்டாவில் அதரித்தாள்-அதற்கு நம் முன்னோர்கள் என்ன நற்றவம்

செய்தனரோ என மகிழ்ந்து பாடின. குயிலினங்கள் கூவி மகிழ்ந்தன. மயில்கள் களிநடனம் புரிந்தன.

நாளொரு மேனியும்-பொழுதொரு வண்ணமாக இரண்டு குழந்தைகளும் உதய ஞாயிறைப் போலவும், இளமதியைப் போலவும் வளர்ந்து கொண்டுவர பத்து நாட்கள் கழிய பதினோராவது நாள் காலை குசுமசிரேட்டியும் அவர் துணைவியும் மங்கள ஸ்நானம் செய்து குழந்தைகட்கும் ஸ்நானம் செய்வித்து ஆடையாபரனங்கள் அணிவித்து வேதவியாக்யானங்களால் வல்ல பெரியோர் பந்துமித்ரர் புடை சூழ கிழக்குமுகமாக அமர்ந்து ஹோமாதி சடங்குகளை வேதவிதிப்படி செய்து நாகரண மகோத்வசத்தை கிறப்பாக நடந்த ஆண்குழந்தைக்கு 'விருபாஷன்' என்றும் பெண் குழந்தைக்கு 'வாசவாம்பிகை' என்றும் நாகரணம் செய்து சந்தன புஷ்ப தாம்பூலங்கள் வழங்கி சான்றோர் ஆசி பெற்று அனைவருக்கும் விருந்திட்டுக் களித்தனர்.

பின் நல்லதொரு சுப முகூர்த்தத்திலே குழந்தைகளைத் தொட்டிலிட உத்தேசித்து பெரியோரும் உறவினரும், சுமங்கலிகளும், சிறுவர் சிறுமியரை அழைத்து அருமையான சொக்கத் தங்கத் தொட்டிகளில் குழந்தைகளை கண்வளரச் செய்து பல நல்ல பாடல்களை சுமங்கலிகளும் சிறுமிகளும் பாட, கோலாட்டம் ஆகியன நடாத்தி கனிகள் நறுமலர்கள், சந்தன தாம்பூலங்கள் யாவும் வழங்கியும் குசும தம்பதிகளும் நகரவாசிகளும் எல்லையற்ற மகிழ்வை எய்தி வாழ்ந்திருந்தனர்.



எத்திராஜ் பிரிண்டர்ஸ் போச்சம்பள்ளி.

## அத்தியாயம் மூன்று

பாற்கடலில் பள்ளிக்கொண்டவனான அந்த நாராயணனின் அம்சமான விருபாட்சனும் அன்னை ஆதிபராசக்தியின் அம்ச மான வாசவாம்பிகையும் பிறந்து இரண்டு மாதங்கள் முடிந்து மூன்றாம் மாதம் பிறந்தது. அவர்களது பெற்றோர்கள் (குசும சிரேஸ்டியும், குசுமாம்பிகையும்) ஒரு நன்னாளில் அக்குழந்தை களுடன் அமைச்சர்கள் புடைசூழ ஆலயம் சென்றனர். அபிஷே கங்கள் யாவும் செய்து சன்னதியில் வணங்கினர். இருகரம்கூப்பி கண்களில் நீர் மல்க இறைவனை பிரார்த்தனை செய்தனர்.

''இறைவனே, எங்கும் நிறைந்தவனே, கஜராஜனின் துன்பத்தை நீக்கவந்து, முதலையை அழித்து கஜராஜனைக் காத்தவனே, மகாபாரதத்தில் பார்த்தசாரதியாக இருந்து தரும புத்திரர்கட்கு வெற்றி தந்து தர்மத்தைக் காத்தவனே. ஜனார்த் தனா, முரளீதரா, ஹரீ, ஸ்ரீமத் பகவத் கீதையை உலகிற்கு அருளிய கோவிந்தா. பச்சைமாமேனியனே வனமாலி! சக்ராயுத னே நின்தாள் சரணம் ! ஐயனே, இச்சிறுகுழந்தைகட்கு நீண்ட ஆயுளும், சகலகலா ஞானமும் நற்குணங்களும், வாய்மையும் இறையன்பும், ஆசாரசீலமும் நோயற்ற வாழ்வும், மாசற்ற இன்பங்களும் நல்குவாய் எம் பெருமானே, திருமாலே, ஜகந் நாதா என்று பிரார்தனை செய்து இரண்டு மழலைகட்கும் கரங் களில் காப்பு அணிவித்தனர். பின்னர் அரண்மனையில் அற்புத விருந்தை அருந்தி மகிழ்ந்து ஆனந்தமாய் இருந்தனர்.

குழந்தை வாசவிக்கு ஐந்து மாதங்கள் ஆயின. குழந்தை தன் திருமுகத்தை சாய்த்து அங்கும் இங்கும் பார்ப்பதும், ஒரு காலை மடக்கி ஒருகாலை நீட்டி இரு கைகளை நிலத்தில் ஊன்றிதலை நிமிர்ந்து 'அம்மா, அப்பா' என்று. மழலை மொழி சொற்களை கூறிக்கொண்டு செங்கீரையாடுதல் போல் செம்மை யுடன் திகழ்ந்தது. தோழியர்களுடன் கூடி குசுமாம்பிகை நம் வாசவியை மாணிக்கத் தொட்டில் இட்டும், இன் னொரு நாள்வைரத் தொட்டில் இட்டும், மற்றொரு நாள் படிகத் தொட்டிலும் இட்டு ஆட்டியபடி மகிழ்ந்திருப்பார், இப்படி தாலப்பருவம் கடக்கும்.

நம் வாசவிக்கு ஒன்பது மாதங்கள் கழிய அவள் இரண்டு கைகளை எழிலுற விரித்து பின் சேர்த்து சப்பாணிகொட்டும் அழகும் மிகவும் நேர்த்தியாக இருக்கும். அது ஓ வைசியர்களே உங்கள சமூக முன்னேற்றம் காண புறப்படுங்கள. தர்மமும் சத்தி யமும் நமது பிறப்புரிமை; அதை மற்றவருக்கு செயலால் காட்டுங்கள்' எனறு காட்டுவது போலிருக்கும. பரமேஸ்வரியாகிய நமது அன்னை குசும சிரேட்டிய ர் மாளிகையில் புன்முறுவல் பூத்து விரைந்து சென்று ஆடி, ஓடி, தயங்கி, ஒல்கி, ஒசிந்து பல விசித்ர வினோதங்களைக காட்டித் தவழ்ந்து வருவதைக் காண ஆயிரம் கண்கள் வேணடும் தம் அன்னையைக் கணடு ஓடிச் சென்று கட்டிப் பிடித்து முத்தங்கொடுத்து அவருக்கு முழு ஆத்ம தாகத்தை சந்தோஷத்தை அளித்தாள். பத்து மாதம் நிறைந்தது அவளுக்கு. அவளை தோழிகள எடுத்து மடிமேல் வைத்து மானே, தேனே, மரகதமே, ஊனே, என் உயிரே! எனப் பலவாறு கொஞ்சிக் குலவி மகிழ்வார்.

பிறர் தளிர் நடைப்பருவம் அம்புலிப் பருவம யாவும் அவளுக்கு நிரமபின. மேல் மாடியில் நின்று கொண்டு நம் வாசவி பூர்ண சந்திரனைக் கண்டு அதைப்பிடிககத் தாவுவாள் கிடைக்காமல் வருந்தி அழுவாள்! குதிப்பாள்! பிடிததுத் தரும் படி பலரையும கெஞ்சுவாள!

அப்போது அமைச்சர்கள் நமது அம்பிகையின் கையில் ஒரு அழகிய கண்ணாடியை கொடுப்பர். அதில் தெரியும் சந்திரனை பார்த்து பிடித்துக் கொடுத்துவிட்டார்கள் ! என்று களித்து அக மகிழ்வாள்!

தோழிகள் வாசவியை உபாத்யாயினியிடம் அழைதது‌ப் போய் ஏனைய மாணவியர் போல பாடங்களைக் கற்கவும் செய்யுள் பாராயணம் செய்யவும் வேதம் ஒதவும் செய்வர்.
வாசவியை எனைய மாணவியர்போல் பாடங்களைக் கற்கவும் செய்யுள் பாராயணம் செய்யவும் வேதம் ஓதவும் செய்வர்.
வாசவியை அவள் தாயார் நன்னீராட்டி இனிய உணவை ஊட்டி ஆபரணங்கள் அணிவித்து, முன் வறுமையாளன் செல்வத்தைப் பெற்றின் அதை எவ்விதம் பாதுகாப்பானோ அப்படியே வாசவியை பாதுகாத்தார். பிறகு நம் அன்னை அம்மானை ஆடியும் அனைவரையும் களிப்பிலாழ்த்துவாள். அவள் அம்மானைக் காய்களை அழகுபட வீசி ஆட சுற்றிலும் தோழியர் அந்த ஆட்டத்தின் அற்புதம் கண்டு 'அங்கிங் கென்னாதபடி நிறைந்து விளங்கும் ஆதி பராசக்தியே என் மனங்குளிர நீ அம்மானை ஆடி அருளே! அகிலாண்ட கோடியும் ஆளும்அம்மையே ஆடிடுவாய்! என்றாடினர்.

வாசவி தம் தோழியர் சூழ அங்குள்ள மரங்களில் அழகிய கிளைகளில் நறுமலர்க்கொடிகளால் ஊசல் அமைத்து உவகையுடன் கீதங்கள் பாடி இறங்கி மேலேறி ஓடியாடி ஒருவருக்கொருவர் விளையாடுவர். தேடிப் பிடித்தும் கூடி நகைத்தும் குளிர்ந்து விளையாடி மகிழ்வர்.

வீர இளம் சிங்கம் போன்ற விருபாட்சனும் வாசவாம்பிகையும் சில விளையாட்டுக்களை வாத்தியங்களைக் கொண்டு ஒலி முழக்கி, சிறுபறைகளை வாசித்து மகிழ்வர். அப்போது வாய்க்கு வந்தபடி மழலையில் பாடல்கள் பாடியும் விளையாடுவர். இது எப்படி இருக்கிறது என்றால் ஒ பாமர மக்களே! கடவுள் பல என்றோ உருவம் அருவம் அற்றவர் என்றோ சண்டையிடாதீர் அனைத்தும் நாமே! ஆக்குவதும் அழிப்பதும் ஆக்கவைப்பவனும்

அழிப்பவனும் அனைத்தும் நமது அம்சமேதான். சரியை கிரியை யோகம் சார்வியதும் நாம்தான் ! இதை அறிவீர்களாக ! என்று கூறுவதுபோல இருக்கும்:

விருபாட்சனும் வாசவியும் தங்கத்திலே செய்து வைரத்திலே இழைத்த கெம்பு நீலக்கற்களில் அழகுபடுத்தப் யட்ட அழகான சிறுதேர்களை இழுத்து விளையாடுபவர் இராசவீதியில் அனைத்துமக்களும் இக்கண் கொள்ளாக்காட்சியை ஆகமகிழ்ந்து ரசிப்பர்.

இப்படியிருக்குங்கால் வாசவியும் விருாபட்சனும் ஐந்தாவது ஆண்டை அடைந்தனர். அது சமயம் குசும சிரேட்டியும், குசுமாம்பிகையும் ஒரு சுபதினத்தில் சுப லக்கினத்தில் இவ்விரு குழந்தைகளையும் குருகுலத்தில் அழைத்துச் சென்று ஆச்சார்யரிடத்தில் அட்சர அப்பியாசம் செய்வித்தனர். அன்று வந்திருந்த வேத விற்பன்னர்களும் சுற்றத்தார்களும் மகிழ்ந்து இக்குழந்தைகளை ஆசீர்வதித்தனர்.

இக்குருகுலத்தின் பெனுகொண்டா மாத்திரமின்றி பாரதமின்றி பாரத நாட்டின் எல்லா இடத்திலிருந்தும் சிறுவர், சிறுமியர் கலை பயில வந்திருந்தனர். பாரத கண்டத்தின் அனைத்து மொழி பேசுவோர்களின் இளைஞர்கள், யுவதிகள் வெகு ஜாக்கிரதையாக உணவு, உடை, இருப்பிடம் ஆகியன தங்கள் இல்லங்களை விட மேலாக இங்கே கிடைத்தது.

இந்த கலா க்ஷேத்திரத்தை குசுமசிரேட்டியார் தமது சொந்த செலவில் நடத்தி வந்தார். இதற்கு 'குசும வித்தியாலயம்' என்னும் பெயர் இடப்பட்டிருந்தது. இங்கு பயில்வோர் அதிகாலைத்துயில் எழுந்து காலைக் கடன் முடித்து இறைவனைத் தொழுது, முன்பு படித்த பாடங்களை மனதில்கொண்டு கூந்தல் முடித்து, புஷ்பம் அணிந்து தூய ஆடை புனைந்து நெற்றியில் திருநீறு, திருமண், திலகம் அணிந்து மகிழ்ச்சிகரமான முகங்களுடன் 'ஜகந்நாதா, ஜனார்த்தனா, தீனபந்து, தேவப்ரியா,

பிரண தீர்த்தா, பவந்த விமோசனா, பார்த்தசாரதி. ராமச்சந்-
திரா, ஸ்ரீகண்டா, சின்மயநாதா, ஷண்முகா, ஞான சமபன்னா
ஸ்ரீதரா, ரிஷிகேசா, ஸ்கந்தா, பக்தவச்சலா, ஜீவரட்சகா,
பன்னகை சயனா, ஸநாதனா, சுமனோகரா. சுப்ரமண்யா,
கருணாநிதே! சாமப்ரியா, சதாசிலா, கிருஷ்ணா, கமலநாதா,
வாசுதேவா, கோவிந்தா, அனந்தசயனா, கோவர்த்தனா,
கோபாலா, பத்மநாபா, தாமோதரா, சத்யாவாசா, வேணு
நாதா, நாராயணா, பாஸ்கரா, ஸ்ரீராமா, ராஜேந்திரா, வன
மாலி என்று இறைவனின் பல நாமங்களை ஸ்மரணை செய்து
துதிப்பாடுவர். இக்குருகுலத்தை நோக்குங்கால் பிருந்தாவனத்
தில் எம்பெருமான் கண்ணனோடு ஆடிப்பாடி கோபிகளும்
கோபர்களும் மகிழ்ந்தது நினைவிற்கு வரும்.

நமது அன்னை வாசவி தன் தோழிகளுடன் ஆடிப்பாடி
செல்வதைப் பார்த்தால் திருவில்லிப்புத்தூரில் பெரியாழ்வார்
மகளாகத்தோன்றி எம்பெருமான் கண்ணனைப்பாடி அவன் மீது
எல்லையற்ற காதல்கொண்ட, அதிகாலையில் நீராடப் போகும்
முன் தோழிகளுடன் செல்லும் கோதை நாச்சியார் [ஸ்ரீ ஆண்டாள்
நினைவு தோன்றும்.

சிறுவர் சிறுமியருடன் செல்லும் வாசவியும் விருபாட்சனும்
தாங்கள் அரச வம்சத்தினர் என்பதை மறந்து சாமான்னியரோடு
படாடோபமின்றி சாதாரண குழந்தைகள் போல் ஓலைச்சுவடிகள்
ஏந்தி செல்வது பார்ப்போர் கண்களில் கண்ணீர் மல்கச் செய்யும்

அங்குள்ள விசாலமான மரங்களின் அடியில் மாணவரும்
ஆசிரியரும் அமர்வார். அங்கே கோதாவரி அற்புதமாக ஓடும்.
தென்றல் மெல்ல வீசும். இம்மனோகர வேளையில் ஆசிரியர்கள்
நன்கு பாடல்களை புகட்டுவார். தாய்மொழி, வேதங்கள்,
சமஸ்கிருதம், இலக்கணம், இலக்கணம், இலக்கியம், தத்துவம்
இதிகாசங்கள் யாவும் குற்றமற கற்பிப்பீர்,

சாகுந்தலம், ரகுவம்சம் முதலிய வடமொழி நாடகங்களை யும், யாழ் குழல் முதலிய இசைக்கருவிகள் வாசிப்பது சரித்திரம் வானசாஸ்திரம் ஆகிய கலைகளும், ஆந்திர மகா காவியங்களை யம் பழுதற கற்றனர். பின் தர்மம் சத்யம், ஆசாரம், அனுஷ்ட னம் துஷ்டக்கிரவம், முதலியதத்துவங்களை ஆசிரியர்கள் பல உதாரணங்களுடன் விளக்குவர். ஆகவேத விதிப்படி உபநயனம் செய்துக்கொண்ட நமது வாசவியும் விருபாட்சனும், இத்தகைய சிறந்த கல்விசெல்வத்தை ஆசார்ய சீலர்களிடத்தில் குருலத்தில் கற்று அத்வைதம். ஆன்மீகம், உபன்யாசம், ஆத்தீகம், ராஜியம். தேசீயம், வஞ்ஞானம், மெய்ஞானம், மருத்துவம் வான சாஸ்திரம், ஜோதிடம், மாந்திரிகம், வர்ணாஸ்ரமம் தேகப்பியாசம், யோகாப்பியாசம் யானை ஏற்றம், வில்வித்தை குதிரை ஏற்றம், இந்திர மமேந்திர ஜாலங்கள் முதலியன சகல கலைகளிலும் சமுதாய பரிபூரண ஞான சம்மன்னராய் குருகுலத் தைப்பூர்த்தி செய்து குருதட்சினைகள் வழங்கி தீர்த்தயாத்திரை செய்து திரும்பி பெனுகொண்டா வந்தடைந்தனர். இது கண்ட குசுமசிரேட்டியும், குசுமாம்பிகையும் கரை கடந்த மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கி உச்சி மோந்து முத்தமாரி டொழிஎது வர வேற்றனர்.

பின்னர் நம் தெய்வக் குழந்தைகள் வயதிலும் அறிவிலும் அருளிலும் அனைத்திலும் வளர்ந்து அழகுறப் பொலிந்தனர். விருபாட்சனுக்கு இளவரசுப் பட்டம் பெறும வயதும், வாசவிக்கு கடிமணம் புரியும் பருவமும் வாய்ந்தன. இப்படி இவ்விரு திரு விளக்குகளும் பிரகாசித்தன!

# அத்தியாயம் நான்கு

உலகின் மேன்மையானது அறம் பொருள் இன்பம் என்ற மூன்று மாபெரும் சக்திகள். அந்த மூலசக்திகட்கு உயிரூட்டு வது மழை என்ற தண்ணீர் ஆகும். இம்மழை தவறாமல் பெய்யின் நாட்டின் நீர்வளம். நிலவளம், குடிவளம் முடிவளம், கொடைவளம், குணவளம், பொருள்வளம் அருள்வளம் ஆக அனைத்து வளங்களும் செறிந்து மிளிரும் அத்தகைய வளங்கள் நிறைந்து விளங்கியது வேங்கி நாடு!

இத்தகைய கவினுறும் வேங்கியின் தலைநகரம் இராஜம கேந்திரபுரம். மிளகு, அகில், தக்கோலம், குங்குமப்பூ முதலிய மலைபொருட்களும் தேன் மயிலிறகு முதலிய காட்டுச்செல்வங் களும் பயறு, வாழை கரும்பு முதலிய வாணிகப் பயிர்களும் உப்பு பவளம் முத்து சங்கு முதலிய கடல் செல்வப் பொருட் களும் தரைமார்க்கமாயும் கடல் மார்க்கமாயும் வந்து குவியத் தக்கவும் தண்ணென்ற மரங்கள் சூழ்ந்த இராச பாட்டைகளும் மிக்கது இந்நகரம். தே, மா, பலா, புளி எலுமிச்சை, நாரத்தை முதலிய பலன் மிகு மரங்களும், நறுஞ்சோலைகளும் சூழ நாற் புறமும் இயற்கை அழகும் பசுமையும் குளிர்ச்சியும் இனிமை யும் அள்ளிப்பொழியும் சோலைகளும் நிரம்பியது இப்பெருநக ரம். நானே பெரியவன்! என்று எவரும் கூறாது இருப்பீர் இதோ என்னைப் பாருங்கள் : எனது வானோக்கிய உயரம் உங்களாள் அளாவிட இயலுமா? என்று கேட்பது போல் உயரத்தை அளக்கும் உயரமாக விளங்கியது இந்நகரத்தின் மதில் சுவர்கள்

இங்கு பாதாளத்தைப் பழிக்கும் அகழிகளும் அதிலே வாழும் பயங்கர முதலைகளும் எங்கள் நாட்டின் மீதுபடையெடுப் பின் நீங்கள் எங்களுக்குத்தான் முதல் விருந்து! என்று அச்சுறுத் தும். அத்தகைய பயங்கர அகழிகள் நிறைந்தது இத்திருநகரம!

இனி கோட்டையில் செல்வோம். மாடமாளிகைகள். கூட கோபுரக்கள், உப்பரிகைகள், கனக மாளிகைகள், கவின் மிகு கோபுரங்கள், சிகரங்கள், வாயில்கள், சாளரங்கள், கோட்டங் டங்கள் அன்னசத்திரங்கள், வர்ண மண்டபம், சொர்ண மண்ட பம், முத்துமண்டபம், மோகனமண்டபம், வைர மண்டபம், வைடூரிய மண்டபம், ஆஸ்தான மண்டபம், இளைஞர் மண்டபம் பக்தி மண்டபம் , கவிஞர் மண்டபம், குமரிக்கோட்டம், வசந்த மண்டபம், நன்மணிமண்டபம், ஆகியவும், ஆயுதச் சாலை அறச்சாலை. மஞ்சன சாலை, அன்னசாலை, அலங்கார அறைகள் ராஜமாதாக்களின், அந்தபுரம், ரத்னமேடை, சலவை கல்மேடை, சந்தனமேடை, சித்ரகூடம், வேத வேள்விசாலை கல்யாணமண்டபம், கதைப்பெட்டிகள் வைக்குமிடம், கல்விச் சாலை, பக்திமிளிரும் தேவ ஆலயமும் கல்விகேள்விஞானமூட்டும் பாடசாலைகளும், வில்வித்தை வாள்வித்தை பயிற்றுவிக்கும் இடங்களும், யானை, குதிரை, ஒட்டகாலயங்களும், சேனைகள் அணிவகுக்கும் தண்டு என்னும் இடங்களும், செவ்வனேஅமைந்து விளங்கியது ராசமகேந்திரபுரி என்ற திருநகரம்.

அந்நகரிலே கடைவீதி, வேளார்வீதி, அந்தண வீதி, சைவ வைசியர் வீதிகள், முனிவரின் தபோவனங்கள் பர்ணசாலைகள் யாவும் பொலிந்து விளங்கும். அப்பெருநகரின் கண்ணே அதியற் புதமான ராஜமாளிகை அனைவர் மனத்தையும் கவருப்படி எழி லுற அமைந்திருந்தது. அந்த அரண்மனையிலே சகல செல்வ சுகங்களும் பொருத அமர்ந்திருப்பவனும் வேங்கி நாட்டைப் பரிபாலனம் செய்யும் நல்லாட்சி நடத்தும் மாமன்னன் விஷ்ணு வர்த்தனன், அவன் சந்திரகுல திலகம்.

அனைத்து உயிர்க்கும் இன்பம் ஊட்டி மகிழ்ச்சி பொங்கிட யாவரும் அகமகிழ்வுடன் போற்ற அரியணைமீதமர்ந்து புகழும் பெயரும் பொலிவுற்ற நிலைநாட்டி விளங்கி வந்தான். அவன் கற்றவன்-கேள்விச் செல்வமும், ஆச்சாரமும், ஒழுக்கமும் மிக்க வன். தர்மசிந்தனையும் மனமும் கொண்டவன். வாய்மையாளன் புலவரைப் பேணும் புரவலன், பெரியோரை பேணி, மண்ணு யிரைத் தன் உயிராக காக்கும் மாசற்றவன், பொறுமையும் வாத்சல்யமும் மிக்கவன். இறையருளும் பக்தியும் பூரணமாய் பெற்றோன், நல்லொழுக்கம் நற்சிந்தனையுடையவன். பாபச் செயலை நினையாத அனைத்து உயிர்கட்கும் ஆண்டவனை வேண்டும் ஏந்தல் ! மாபெரும் வீரன் ! வைராக்யன் ! சமயப் பொறை கொண்டவன்- தீரவிசாரிக்கும் சித்தியுடையோன்-குடி களை ஓம்பும் கோமான் ! நீதி தவறாத நடுவன் !

ஐம்பெருங்குழுவும், எண் பேராயமும் நால்வகைப் படை களும் கொண்ட மாவீரனான விஷ்ணுவர்தனன் அறம் பொருள் இன்பம் பெற்று அஸ்ட ஐஸ்வரியங்களும், நவரத்னங்களையும் குவியல் குவியலாகப் பெற்றவன்.

செங்கோல், மலை, ஆறு, நாடு, ஊர், மாலை, புரவி, யானை, முரசு, கொடி என்ற தசாங்கங்களையும் வகுத்தும் கங்கை யமுனை முதலான பதினோறு புண்ய நதிகளையும், அதன் கரைகளில் சத்திரங்கள் அமைத்து அன்னதானம் வித்யா தானம் முதலிய செவ்வனே நடத்தி குடிகட்கு எவ்வித வேதனை களும் நேராது, காத்து உலகம் சுபீட்சமாய் வாழ மனு நீதி தவறாது செங்கோல் செலுத்தி வந்தான்.

இவனது ஆட்சியில் சண்டை, சச்சரவு, குற்றம், கொலை முதலிய எகக்குற்றமும் நடவாது ! மனிதர், விலங்குகள் பறவை மரம், செடி, கொடி புல் பூண்டு பயிர் ஆகிய எத்தாவரவர்க்கங் கட்கும் இதர பாகத்திற்கும் எவ்விதக் குறையும் நேராது! மாதம்

மும்மாரியும் தவறாது பெய்து எங்கும் சுபிட்சம் நிலவும் பயிர்கள் செழிக்கும்-விளைச்சல் பெருகும் கைத் தொழில் வளரும் எங்கு நோக்கினும் திருமகளின் கடாட்சம் தாண்டவமாடும்.

புலவர் செயங்கொண்டார் தமது கலிங்கத்துப் பரணியில் 'வருசெரு வொன்றின்மையால் மற்போரும் சொற்புலவோர் வாதப் போரும் இருசிறைவாரணப் போரும் இகல்மதவாணப் போருமிணையைக் கண்டேன்! ஒப்ப உயர்வற்ற செங்கோல் செலுத்தி அரசாட்சி புரிந்து வருகையில் ஒருநாள் மன்னரின் சபாமண்டபத்தில் மந்திரி பிரதகனுகள், புலவர்கள் சான்றோர் கள் அறிஞர்கள் பலவித விற்பன்னர்கள் சபையில் நிறைந்து விளங்க இசைப் புலவர்கள் பாடலு கணிக்கையரின் பரத நாட்டியங்களும் நிகழ்ந்தன. பல பரிசில்கள் கலைஞர்கட்கு மன்னர் வழங்கினர்,

பின் மாபாரத பிரசங்க தடைபெற்றது ஒவ்வொரு நாளும் அதை சபையில் நடத்த உத்திரவு அளிக்கப்பட்டது. புராணிகள் பிரசங்கத்தைத் துவக்கினார்.

பாரதத்திலே அன்றுஇராஜசூய யாகம் நடைபெற இருந்தது பாண்டவர் இராஜ சூய யாகம் செய்ய எண்ணி திக்விஜயம் புறப் பட்ட முறைகளை நன்கு எடுத்துரைத்தார் பாண்டவர் எவ்வாறு இதர அரசர்களை வென்று யுத்தத்தில் மாபெரும் வெற்றி மாலை சூடினர் என அழகாக விளக்கினார், பாண்டவர் திக்விஜயம் செய்து கொணர்ந்த திறைகளை தர்மரிடம் எப்படி சமர்பித்த னர். அதுகேட்ட விஷ்ணுவர்தனன் ஏன் நாம் பிறநாடுகள் மீது படைகொண்டு திக்விஜயம் மேற்கொண்டு வெற்றிக்கொடி நாட்டக்கூடாது? என் தம்மனதிலெண்ணி நம் முன்னோர்கள் இப்படி எத்துணை வெற்றிகளை குவித்தனர். அதைப் போல் நாமும் இசைப்பட வாழ்தல் வேண்டும் என்று எண்ணி பிரதிக்ஞை மேற்கொண்டார். நாவலந்தீவிலுள்ள அங்க வங்க கலிங்க காஷ்மீர 56 தேசங்கட்கும் படையுடன் திக்விஜயம் செய்து வெற்றிக்

நாட்டி வருவேன் என்று எண்ணிய மன்னர் தம்அமைச்சர் படை கட்கு தம் திட்டட்தை விவரித்து புறப்பட ஆயத்தம் செய்ய கட்டளையிட்டான். நாளையே புறப்பட வேதபேரயணத்தார் நாளுப் குறித்துக் கொடுத்தனர்.

சில அமைச்சர்களிடம் ஒப்டைத்தமன்னர் மறுநாள் திக்விஜயத் துக்கு ஆயத்தமானான். நீராடி பட்டுடைகளை புனைந்து, செந் தூரம் அணிந்து இறைவனை ஸ்வாமி அடியேனின் திக்விஜயத் தில் வெற்றியை நல்குப்படி திருவருள் செய்யவேண்டும்! என்று பிரார்த்தித்து, பின் உணவுண்டு தாம்பூலம் தரித்து, பொற்கவச மணிந்து கிரீடம், குண்டலம, கண்டசரம், வாகுவலயம் முதலியவும் வீரவாள், அம்புவில் தலைகவசம்சகிதம் யுத்தபிரசத் தானாய் கதை சக்கரத்துடன் வாயுவேகத்துடன் தனிப் புரவிகள் பூட்டிய நேரில் ஆரோகணித்தான்,

பேரிகை. முரசு, தாளம், மத்தளம் தாரை, தக்கை, சச்சரி பம்பை, பாங்கா, உருமி கொம்பு குழல் டமாரம் எக்காளம் முதலிய வாத்யங்கள் முழங்க மங்கல மங்கையர் மகிழ்ந்து இரு புறமும் வெண் சமாரங்களை வீசி நின்றனர், பூச்சரங்குடைகள் கவினுற நிழல் செய்தன. பேரரசர், சிற்றரசர், அமைச்சர்கள், படைத்தலைவர்கள் கொடித்தலைவர், ஆதிகாரிகள், பொக்கி ஷதாரர்கள் ஆகியோர் தத்தம் வாகனாதிகளில் அமர்ந்து கட்டி யம் கூறுவோர் வாழ்த்தசைப் போர் முதலியோர தத்தம் தொழில்கள் புரிய ஆலவட்டம் மயிற்பீலி தோரணம் அலங்கார மாய் பட்டுக்குடைகள் கொடிகள சகிதம் செல்ல, மதம் சொரியும் யானைப்படையும். அதியற்புத அழகுடன் அலங்கரித்த குதிரை கள் பூட்டிய தேர் படையும் வில், அம்பு, கேடயம் சகிதம், வீர கர்ஜனை செய்த போர் வீரர்கள் பேரியாழ், மகரயாழ், சகோட யாழ் முதலிய வாத்யங்கள் முழங்க '' மூவுலகும் போற்றும் முடி மன்னன் விஷ்ணுவர்தனர் வருகிறார் .

வீதிகள் வெகு விமரிசையாக அலங்கரித்து மலர்மாலைகள் பூத்தோரணங்கள், பச்சைப் பந்தல்கள், கமுகு, புட்ப மாலைகள் முதலிய அலங்காரம் செய்த அழகு செய்யப்பட்டு, மக்கள் சர்வ பரண பூஷிதராய் தங்கள் மாமன்னரை பாடியும், ஆடியும் மங்க-லங்கள் கூறியும் ஜெயபேரிகையுடன் வென்று திரும்புக! என்று வாழ்த்தி அனுப்பி வைத்தனர் ராஜமகேந்திரபுர மக்கள்

இப்படைகளும் மன்னரும் வரும் கோலாகலங்களைக் கண்ட சிலர் இப்படைகளின் சமுத்திர ஒலியைப் போன்ற சங்கம ஒலியைக் கண்ட சில மன்னர்கள் விஷ்ணுவர்த்தனர் திக்விஜயம் என அறிந்து மரியாதையுடன் எதிர்கொண்டழைத்து மன்னருக்கு சேனா சமுத்திரத்திற்கும் விருந்துகள் அளித்து பல காணிக்கை களைச் செலுத்திப் பணிந்தனர்! ரத்னாபரணங்கள் முத்தாரங்கள் தங்கக் கட்டிகள் யானைகள் குதிரைகள் ஒட்டகங் கள் தேர்கள் பசுக்கள் விலை உயர்ந்த ஆடைகள் வாசனைப் பொருட்கள் தங்க வைர ஆபரணங்கள், புனுகு, சவ்வாது கஸ்தூரி முதலியனவும் பரிசீலித்து வணங்கி விடைபெற்றனர்.

சிலமன்னர்கள் விஷ்ணுவர்தனன் நம்மை என்னசெய்வானோ என்று பயந்து ஓடி ஒளிந்தனர். சில மன்னர்கள் இவன் என்ன பெரிய வீரனா? பார்ப்போம் என்று அவனிடம்போரிட்டுதோற்று உயிர் துறந்து மாண்டனர் ! சிலர் புற முதுகிட்டு ஓடி ஒளிந்தனர் சிலர் வீரமரணம் எய்தினர்.

இவ்வாறு அநேக தேசங்கட்கு சென்று வெற்றி பல பெற்று வெற்றித் தூண்களை நாட்டினான். திரும்பவும் நடு திரும்ப வரும்போது ஒரிடம் ஆங்காங்கு எழில் பொங்கும் அழகான மலர் சோலை ஒன்றைக் கண்டான். அதில் மனத்தைப் பறிகொடுத்து இன்று இவ்வழகிய சோலையில் நம் படைகளை தங்க விடுங்கள்' என்று உத்திரவிட்டான்.

# அத்தியாயம் ஐந்து

கௌதமீ என்றும் கோதாவரி என்றும் அழைக்கப்படும் அந்நதிக் கரையில் தங்கிய சேனைகள் அச்சோலையைச் சுற்றி மிகவும் மகிழ்வுடன் கண்டு களித்தனர், அதன் அழகைக் கண்டு அதிசயப்பட்டனர்.

அச்சோலையில் விஷ்ணுவர்தனன் நுழைந்துபார்த்தான்! அச்சோலையானது வானலோகத்து அரிசந்தனம், சந்தனம் மந்தாரம் பாரிஜாதம் கற்பகம் என்னும் தேவலோக தருக்கள் நிறைந்து வானுற ஓங்கி வளம் பெற்ற அழகையும் சந்தனம் அகில் பாதிரி கோங்கு குங்குமம் முதலிய மரங்களும், மல்லிகை முல்லை இருவாட்சி நந்தியாவட்டம் காந்தள் சண்பகம் முதலிய பலவித பூமரங்களும் கொடிகளும் செடிகளும் புல்வகைகளும், நன்னீர் வாவிகளும், பற்பல விதமான அழகிய பறவைகளையும் இருகன் குளிர பார்த்துக் கொண்டும் அதன் ஒலிகளைக் கேட்டுக் கொண்டும் சென்ற மன்னன் அங்குள்ள உத்யானமன்டபத்தில் உள்ள பளிங்கு மண்டபத்தில் ஒரு ஆசனத்தில் அமர்ந்தான்

பின் அம்மாளிகையின் அற்புதங்களைக் காண உள்ளே சென்று ஆங்காங்கு உள்ளே விசித்திரங்களையும் அற்புதஅழகையும் கண்குளிரக் கண்டு சொல்லொணா மகிழ்வு எய்தினான் வேந்தன். இப்பெருஞ்சோலையானது வைசியர்களின் பெனு கொண்டாபுரி பட்டிணத்தைச் சேர்ந்தது என்றும் அந்நகரின் வரலாறு வியக்கத்தக்து சிவபிரான் அருளால் விசுவகர்மாவால் நிர்மாணித்தது என்றும் அது எல்லையற்ற அழகும்

வளங்களும் கொண்டிருக்கும் என்று மன்னன் அறிந்தான். அது தான் அதை நாம் இதுவரை பார்க்கவில்லையே என்று வருந்திய போது சற்று தூரத்தில் ஒரு அழகான நகரம் அமைந்துள்ளது கண்டு மன்னன் திகைத்தான். மாடமாளிகைகளும் கூட கோபுரங்களும் அமைந்து மகாலட்சுமியின் திருக்கடாட்சத்தில் பொலியும் நகரம் எது என்ற வியப்புடன் கவனித்து மந்திரியிடம் எதிரே குபேரனின் மனோவதிப் பட்டினமும் அதற்கு ஈடுஆகாது போல் தெரிகிறதே அது எந்தப்பட்டணம்? அங்குள்ள உத்தமர்கள் எவர் எனக்கேட்டான். அமைச்சர் விளக்கினார். அது பெனுகொண்டாபுரி என்றும் வைசியரின் திருநகரம் என்று விளக்க, இப்பட்டினத்தின சிறப்பை நாம் கேட்டும் இதுவரை நாம் பார்க்கும் பாக்கியம் கிட்டவில்லையே! ஆதலால் இத்தருணம் நகரலங்காரம் கண்டு பின் நமது தலைநகரை அடையலாம் என்று தீர்மானித்தான்!

பெனுகொண்டாபுரி நகரில் குசும சிரேஷ்டியும் ஏனைய வைசியரும் அந்நகர் பூங்காவில் மன்னர் விஷ்ணுவர்த்தனன் சேனையுடன் தங்கியிருப்பது கேட்டு, மன்னரை தக்கமரியாதையுடன் வரவேற்க, தம் இனமக்களின் கூட்டத்தை கூட்டி ஏகமனதாகத் தீர்மானித்தார்.

அவர்கள் ஸ்ரீ குசுமசிரேஷ்டியின் தலைமையில் குடைகள் மகர தோரணங்கள் முன் செல்ல வாழை திராக்ஷை போன்ற கனி வர்க்கங்கள், முல்லை மல்லிகை சண்பகம் போன்ற மலர் மாலைகளும் சந்தனம், பன்னீர், குங்குமப்பூ, கஸ்தூரி முதலிய வாசனாதி திரவியங்களும், பாக்கு, ஏலம், கிராம்பு, முதலிய தாம்பூல வகைகளும் பட்டு பீதாம்பரங்கள் வைர தங்க அணி கலன்களுடன் மங்கள வாத்யங்களுடன் பூங்காவனத்தை பரிசுகளை மன்னரிடம் சமர்பித்து மகாபிரபு தங்கள் எழுந்தருளியுள்ள இப்பூங்காவனமும் எங்கள் நகரமும், நாங்கள் செய்த அருந்தவப்பயனே! தங்களின் வரவால் எம்மனம் எல்லையற்ற மகிழ்வு அடைகிறது. மேலும் அருகே உள்ள எம்பெனுகொண்டா

புரியையும் தங்கள் பிரவேசித்து எமக்கு மகிழ்ச்சியை நல்க வேண்டும். ஆகவே தயவு கூர்ந்து எம் பட்டணத்திற்கு விஜயம் செய்து எம் மக்கட்கு தரிசனம் ஈந்து கருணை செய்ய வேண்டும்! என்று வேண்டினர்.

அது கேட்ட மன்னன் 'உங்கள் மேன்மையான ஸ்தலத்தை காண நமக்கு வெகு நாட்கள் பிரேமை ஆனால் காலம் கிடைக்கவில்லை ! இப்போது உங்கள் அழைப்பும் காலமும் கிட்டியுளது நாளை நாம் வருகிறோம் ! உங்கள் அன்புக்கு நன்றி ! என்று அவர்களிடம் கூறி அன்றைய வேங்கி நாட்டின் அரசியல் கலை. இலட்சியங்களையும் வைசியர்களின் ஷேம லாபங்களையும் வாழ்க்கை முறைகளையும் வெகு வினயமாய் விசாரித்து பின் அவர்கட்கு விடையளித்தான்.

விஷ்ணுவர்த்தன மன்னர் தம் நகருக்கு விஜயம் செய்கிறார் என்று கேட்டதும் மக்கள் நகரை வெகு அலங்காரத்துடன் அழகு படுத்தினர், வீதிகளில் பச்சைப் பந்தல், புஷ்பவிதானம், மகர தோரணம் மாவிலை தோரணம் முதலியனவும் நறுமலர் மறுகள் வரிசையாக கட்டி வாழை, கமுகு முதலிய மரங்களும், வீடுகள் தோறும் பூர்ணகும்பங்கள் மணி விளக்குகள் நிலைக்கண்ணாடிகள் முதலிய மங்கல பொருட்களை வைத்தனர். தெருக்களில் கோரை, ஜம்பு, முதலியன பரப்பி அதன் மேலே மெத்தென செய்து சித்ரவேலைப்பாடுகள் செய்த பட்டாடைகள் பரப்பி அலங்கரித்தனர். பூங்காவில் தங்கிய மன்னர் காலைக்கடன் முடித்து சர்வாபாரண பூஷாணக சதுரங்க சேனைகளுடன் மங்களம்பொங்க பெனுகொண்டாபுரி பட்டினத்தை அடைந்தான்

மங்கல வாத்யங்கள் முழங்க வெண்கொற்றக் குடைகள் நிழலற்ற பெண் சாமரங்கள் வீசிட பல விருதுகள் முன்செல்ல

மங்கள மங்கையர் யாவரும் பாடவும் இசைக் கவிஞர் வாத்யங்கள் இசைக்க ஆடம்பர ஸ்மாங்களுடன் அரசர் முன் செல்ல ஏனையோர் பின் நடக்கவும் வைசியோத்தமர் பலர் உபசரனைகள் செய்ய வீதியில் ஆடவர்கள், ஆரிய வைசிய இளைஞர்கள் முதியோர் யாவரும் உப்பரிகை மேல் நின்றபடி ராஜபவனியை கண்குளிரப் பார்த்துக் கொண்டும் அரசனின் எழில் வீரம், கொடை. திறன் ஆகியவைப்பற்றி புகழ்ந்து பேசினர். விஷ்ணு வர்தனன் நாகேஸ்ர்சாமி ஜனார்த்தனசாமி ஆலயங்கட்கு சென்று சேவித்து தான தர்மங்களை செய்து விமரிசையாக செல்கையில் ஆலயசித்ரவிசித்ரங்கள் உப்பரிகை மேல்மாடி முதலிய எழிலுடன் மிளிர்வதும் அங்கு குழந்தைகளும், மற்றவரும் யுவதிகளும் தேஜசுடன் மிளிர்வதைக் கண்டு ஆனந்தம் கொண்டார் மன்னர் அவர்களை வாழ்த்தியபடியே நடந்தார் மன்னர்,

அப்படி செல்கையில் அதி மனோகரமான ஒரு மாளிகை ஒன்றைக் கண்டான். அருகே செல்கையில் குசும சிரேட்டியாபு அநேக கனிகள் பான வகைகள் மன்னர்க்கு உபசரித்தரர்

இது பெருமையது எனஎனமன்னர் கேட்க இதுவும் இந்த நகரை சேர்ந்து பதினெண் புரங்களும் குசுமசிரேட்டிக்கு உரியது எகைக்கேட்ட மன்னன் அம்மாளிகையின் அழகில் மயங்கினான். அதன் கட்டிட அமைப்பு சித்திர விசித்ர வேலைப்பாடுகள் மன்னனைக்கவர்ந்தன. அப்போதுநம் அன்னை வாசவிதேவியாரும் அவரது அன்னையும் அன்னையும் அரச ஊர்வலம் காண மேன் மாடியில் நின்றிருந்தனர். அங்கே விண்மீன்கள் கூட்டத்திலே ஒளிரும் சந்திரனைப் போன்ற அழகின் தோற்றம் கொண்டு காந்தமலை போன்ற கண்களும் எல்லையற்ற எழிலும் கொண்ட நம் அன்னையை விதிவசத்தாலோ, மாயையின் சூழ்ச்சியாலோ அல்லது அன்னையின் விளையாட்டை அனைவரும் அறிய வேண்டியதாலோ மன்னன் நம் வாசவி தேவியை கண்டான்

அக்கனமே அவனது நல்நெஞ்சம் கடமை வீரம் பண்பு யாவும் அவனை விட்டு நீங்க இம்மதிவதன எழில்தான் என்னே! இத்துணை பேரழகு பெண் கூட உலகில் உளரா? என்று எண்ணினான்!

உடனே மன்னன் கூற முடியாத சிந்தனை, குழப்பம் வியாகூலங்கட்கு உள்ளாகி தாம் நகர் வலம் வரும் மன்னன் என்பது கூட மறந்தான். இதையறிந்த மன்னரது பிரதம அமைச்சர் இதென்ன நம் மன்னனால் சோதனை வரும் போல் உள்ளதே என்று எண்ணி, மன்னரை பலவித ஆறுதல் மொழிகள் கூறி நகர்வலம் முடிந்து வைசியர்களால் அளிக்கப்பட்ட பரிசுப் பொருட்களுடன் மன்னரை அந்த உய்யான வனத்தில் சேர்த்தான்! மேலும் அந்த அழகு நங்கை குசுமசிரேட்டியின் திருப்புதல்வி என்பதையும் அமைச்சர் அறிந்து கொண்டார். மன்னனோ விரகதாபத்தால் பெருமூச்சுவிட்டபடி பளிங்கு மண்டபம்சென்று ஸ்தம்பித்தபடி இருந்தான்.

அரசகாரியங்களைக் கவனிக்காமலும் ராஜமகேந்திரபுரம் செல்லும் யோசனையே ஏதுமின்றி வாசவியின் திருமேனியழகும் முகத்தான எழிலும், கூந்தலின் கவர்ச்சியாலும் மயங்கி மனம் வேதனைப் பட்டுக்கொண்டிருந்தான். உணவு கொள்ளவில்லை உறக்கம் பிடிக்கவில்லை அவனுக்கு! வெளியில் யாருடனும் பேசவுமில்லை!

ஆகவே பிரதமமந்திரி மன்னனை அணுகி, பெரும! தாங்கள் ஏன் இந்த வாட்டமுற்று இருக்கிறீர்கள்? தங்கட்கு வேண்டுவது எது? சப்த சமுத்திரங்களைத் தாண்டியும் ஈரேழு லோகங்களைக் கடந்தாவதுகொணர நான் ஏற்பாடு செய்கிறேன் தங்களின் மனவாட்டம் என்னை இம்சிக்கிறது என்று பணிவுடன் வேண்ட, மன்னன், எனது அருமை அமைச்சரே! புதல்வனைக் காட்டிலும் புனித அன்பு கொண்ட புண்ணியரே! உம் போல் எமக்கு நல்ல நண்பர் கிடைத்தது எமது முற்பிறவியின் பயனே

யாகும்! இதோ உம்மிடம் கூறாது எவரிடம் கூறுவேன்? நாம் திக்விசயமாக பல நகரங்கட்கு சென்றோமல்லவா? போர் புரிந்து பல மன்னரைவென்று வாகை சூடினோம். பல பல பரிசுகளை தந்து நம்மை பணிந்தனர் ஏத்துணையோ மன்னர் கள்! அப்போது நாம் பல்லாயிரக்கணக்கான பெண்களை [நமது அடிமைகளாக, நமக்கு பரிசளித்தோம் கண்டோம் அல்லவா?

ஆனால் இப்பெனுகொண்டபுரியின் தலைவர் குசுமசிரேட்டியின் மகளான வாசவியைப் போன்ற ரூப்லாவண்ய ஏழில்நங்கையை நானிலங்களிலும் காணேன்! அப்பெண்மணியை சிருஷ்டிக்க பிரமன் எங்கு பயின்றானோ? ஒரு வேளை பிரமதேவன் தான் இதுவரை சிருஷ்டித்த அழகு பெண்களின் அழகுகள் அனைத் தையும் ஒருங்கே திரட்டி இவளைப் படைத்திட்டான் போலும்! ஆ! எப்படிப்பட்ட அழகியரைக்காணினும் சிறிதும் தளராத எனது மனம் இவளைக் கண்டதும் அனலிட்ட மெழுகு போல் உருகி விட்டதே! அத்தகைய உத்தமப் பெண்ணை அழகோவியத்தை செங்கமலவதனியை திருமணம் புரிய வைப்பாரேயின் இப்போது நம்மனக்குறை தீரும்! அதுதான் என் மனோபீஷ்டமாகும்! நான் விரும்பும் விண்ணமுது! என் உள்ளம் குளிர, என் ஆனந்தத்தைப் பெருக்கும் அற்புத மருந்து! அதுதான் நீர் எமக்குச் செய்யவே ண்டிய பேருதவியாம்! நாம் உம்மை ஏழெழு பிறவியிலும் மறவாது நினைக்கத்தக்க அத்துணை சிறந்த நன்றி!'' என்று இயம்பினார் மன்னர்!

அது கேட்ட அமைச்சர் ''மன்ன! இதற்கு தக்க ஏற்பாடுகள் நான் செய்கிறேன் நீர் வருந்தற்க! தாங்கள் உணவுகொண்டு மகிழ்வுடன் இருப்பீராக!'' என்று உபசார வார்த்தைகளில் தேறுதல்கூறி மனந்தெளியச்செய்து தோழியரை அழைத்து மன்னர்க்கு ஆகாரவகைகள் அளிக்க ஏற்பாடு செய்துவிட்டு நகர்ந்தான்!

# அத்தியாயம் ஆறு

நம் அன்னை வாசவியைக் கண்ட மன்னன் விஷ்ணுவர்தனன் தன்நிலையை இழந்தான். தான் ஒரு மாபெரும் சாம்ராஜ்ய மாமன்னன் என்பதையோ, தர்மத்திற்கும் சத்தியத்திற்கும், தான் கட்டுப்பட்டவன் என்பதையும் கூட மறந்தான். அது மட்டுமின்றி, தான் பெனுகொண்டாபுரிக்கு விருந்தினராக வந்ததையும் மறந்து, வாவியின் தெய்வீக பேரெழிலில், மயங்கி, கீழ்தரமான உணர்ச்சிக்கு பலியானான்- அக்கணமே அவனது அறிவு, விசால இதயம், நற்பண்புகள் யாவும் அவனிடமிருந்து மறைந்தன

எவராலும், வெல்ல முடியாத கோரப்பிடியில் சிக்கினான்! வெறித்தபடியே, நிற்கும் வாசவியை இமையாமல் பார்த்தபடி இருந்தான்! இவனது செயல் அமைச்சர்கட்கும் சேனாதிபதி கட்கும்பெரும் சங்கடத்தை விளைவித்தன! இதனால் அவர்களும் பிரமைபிடித்தவர் போல் ஆயினர்!

ஆனால் பிரதம அமைச்சகர் சிறந்த மதியூகி! நற்குணவாதி! ஒரே நொடியில் மன்னனது குழப்பத்தை அறிந்துகொண்டார். மன்னனின் மனவாட்டத்தை இன்சொற்களால் பேசி, அவனது பிரமையைக் குறைத்து, தங்கியுள்ள சோலைக்கு மெள்ள அழைத்துச் சென்றார்.

அவரை அங்கே தங்கவைத்து, உணவு, மற்றும் நல்ல ஓய்வு கொள்ள வசதி செய்து பின் சென்றார். ஆனால் மன்னன் உனவு சரியாக உண்ணாமல் பித்துப் பிடித்தவன் மாதிரி வாசவி தேவியையே எண்ணி எண்ணி ஏங்கிக்கொண்டிருந்தான்

இதைக்கண்ட பிரதமமந்திரியின் மனம் வருந்தியது. இதென்ன சோதனை; மன்னரின் மனம் இப்படியா மாறவேண்டும்! இது நல்லதில்லையே!

'மன்னர் ஷத்ரியர்! அவர்களோ, வைசியர்கள் மகாஞான மும் வைராக்கியமும், தர்மசிந்தனையும் கொண்டவர்கள்!

எப்படி மன்னனுக்காக பெண் கேட்கப் போவது? கேட்டா லும் அவர்கள் எப்படிகொடுப்பார்கள்? அவர்கள் இருக்கட்டும்.

அந்தப் பெண் வாசவி விரும்புவாளா? விருப்பம் என்று ஒன்று இருக்கிறதே! யாரையும் கட்டாயப்படுத்தி விருப்பப்பட வைக்க இயலாதே! என்று மதிமந்திரி மிகவும் யோசித்தார் ஆனால் மன்னர் அப்பெண்ணை எண்ணி படும்பாட்டை நினைத்து தாமே மன்னருக்காக பெண் கேட்க குசுமசிரேட்டியிடம், பெனு கொண்டாபுரி சென்றார்.

அன்புடன் அமைச்சரை வரவேற்ற குசுமசிரேட்டியிடம், இதமாக பேசினார் மகாமந்திரி ''ஐயா. எம் மன்னர் குலமும், தங்கள் குலமும் பிரசித்தி பெற்றது உலகு அறிந்ததே. இப்போது இவ்விரு குலங்களும்-இணைந்து உலகின் சிறந்த இயக்கமாக -பேரரசாக ஆக வேண்டும் என்று நானும், எம்மன்னரும் எமது ராஜமகேந்திரபுர மக்களும் பெரும் விருப்பம் கொண்டுள்ளோம்.

உமது மகள் வாசவியை எம் மன்னர் திருமணம் செய்து பரந்த இந்த ஆந்திர மாநாட்டு பட்டமகிஷியாகசெய்து கொள்ள விரும்புகிறார்.

எம்மன்னர் சிறந்த வீரர்! அவர் தம் வாழ்நாளில் எத்த னையோ போர் செய்து வென்றவர்-பல பேரரசுகளை மண்டி

யிடச் செய்தவர். தர்மவான்! தம் பட்ட மகிஷி தவிர வேறு பெண்களை கண்ணெடுத்தும் பாராத மகா உத்தமன்

ஆனால் உங்கள் மகளின் பேரெழில் போல் அவர் எஞ்ஞான்றும் காணவில்லை! உத்தம குணம் கொண்ட உம் புத்ரியை தம் இல்லத்தரசியாக பட்டமகிஷியாக அடைய மிக்க ஆர்வமும் அவாவும் கொண்டுள்ளார்.

ஆகவே நற்குணவதியான உம் வாசவியை நற்குண சீலனான எம் மாமன்னர் விஷ்ணுவர்தனனுக்கு மணம் முடித்து தரும்படி அன்புடன் வேண்டுகிறேன். இதனால் உமது இனம் பெயரும் புகழும் மேன்மையும் ஐஸ்வரியமும் பெற்று சிறந்து விளங்கும்!'' என்று கூறினார்—

இது கேட்ட குசுமசிரேட்டியிடம்—இத்ர் வைசியத் தலைவர்களும் அதிர்ச்சி அடைந்தனர்! இதென்ன சோதனை? இந்த மன்னரை வருந்தி உபசரித்தது விசகாக போய்விட்டதே!

''நாம் பெண்ணை எப்படி அவனுக்கு தர முடியும்? வைசிய இன யுவர்கட்குத்தானே பெண் கொடுப்பது வழக்கம்? ஷத்திரியர்கட்கு கொடுப்பது இதுவரை இல்லையே! மேலும் நம் பெண் ஒருக்காலும் இதை விரும்பமாட்டாளே! '' '‚ஐயனே லட்சுமி நாராயணா! '' இதென்ன சோதனை? ,, என்று பலவாறு துக்கப்பட்டு, பின் சமாளித்து, அமைச்சரிடம் ,,ஐயா இவ்விசயம் நான் மட்டும் முடிவு எடுத்து சொல்லும் விசயமல்ல! என் இன பெரியோர்கள் அபிப்பிராயம், என் மகளின் அபிப்ராயம் முதலியன கேட்டு விரைவில் செய்தியை தூதுவர் மூலம் சொல்லி அனுப்புகிறேன்!'' தங்கள் சென்று வருக! என்று அமைச்சரை அனுப்பி வைத்தனர்!

அதற்குள், பூஞ்சோலையில் இருந்த மன்னன் அமைச்சரிடம் அவர்கள் மறுத்தாலும் மறுக்கலாம் நாமே அவர்களை அழைத்து கேட்கலாம் என எண்ணி சேவகரை அனுப்பி குசுமசிரேட்டியை அழைத்துவர செய்தான்!

வந்த குசுமசிரேட்டியை ஆசனம் அளித்து அமரச்செய்து அவனது விருப்பத்தை வெளியிட்டான். குசுமசிரேட்டியோ, அமைச்சருக்கு அளித்த பதிலையே அளித்து தூதுவர் மூலம் விரைவில் சொல்லி அனுப்புவதாக தெரிவித்தார்.

பின் தன் இருப்பிடம் சென்றார் - மந்திரியும் தான் பேசியது விபரமாக மன்னரிடம் தெரிவிக்க மன்னன் [சற்று ஆறுதல் அடைந்து தன் நாடு திரும்ப உத்தரவிட்டான்.

மன்னன் தன் அரன்மணையிலே நடைபிணமாக உலவினான் வாசவியின் அழகையே எண்ணி எண்ணி துடித்தது அவனது மனம்! எச்சமயத்திலும் எவ்வேலையிலும் மன்னன் வாசவியின் நாமத்தை துதித்துக்கொண்டிருந்தான்! பாலும் கசந்தது, படுக்கையும் நொந்தது அவனுக்கு அவளை எண்ணி எண்ணி முகம் சோர்ந்து,பெருமூச்சுவிட்டு துயரக்கடலில் மூழ்கினான் மன்னன்.

இரவு வந்தால் அவன் ஆசைத்தீயில் வெந்து-தன்னைத் தானே உண்டி சுருங்கி, உடல் தளர்ந்து மயக்கம் தலைக்கேறி மூர்ச்சையுறுவான் மன்னன்! தோழியர் பதறி மயக்கம் தெளிவித்து சப்ரமஞ்ச கூடத்தில் கிடத்துவர் மன்னனை! இது நாள்தோறும் நடக்கும் கூத்தாக இருந்தது!



## அத்தியாயம் ஏழு

பெனுகொண்டாபுரியில் - குசுமசிரேட்டியார் பதினென்புர வைசியர்களையும் -நம் தேவாலயத்தில் கூட்டினார் பின் எழுந்து ''வைசியத் திலகங்களே! புத்திரகாமேட்டியாகம் செய்து-பெற்ற எம் செல்வியை விஷ்ணுவர்தன் மன்னன் பெண் கேட்கிறார்! மன்னர் நம்வைசியஇனத்தார்அல்ல! க்ஷத்திரியர்!க்ஷத்ரியருக்கு பெண் கொடுக்கும் வழக்கம் நமக்கு இல்லை! அது உசித மானதும் இல்லை! அவருக்கு பெண்கொடுப்பு தென்றால் குல, கோத்ரம், ஜாதகம் பொருத்தம் பார்த்து கொடுக்க இயலாது! அவரது பயத்திற்ககாத்தான் கொடுக்க வேண்டும் நாம் எதத்கும் பயப்படத் தேவையில்லை. '' நாமார்க்கும் குடியல்லோம்! நமனை யஞ்சோம்!''

மேலும் அவன் நம்மீது யுத்தம் தொடுப்பான் என்று அஞ்ச வும் தேவையில்லை! எல்லயுத்தங்களிலும் ஜெயிப்பவர் பகவான் ஒரு வன்தான்! ''ஸ்மிதினா ஜயாயா நம!'' ஆகவே நாம் அவனது படைபலத்தை கண்டு அஞ்சத் தேவை இல்லை! இது விசஷீயமாக தங்களின் கருத்துகளை கூறுங்கள் என்று கேட்க, சிலர் எழுந்து ஐயா,மன்னருக்குப் பெண் கொடுப்பதுதவறில்லை! காலம் மாறுகிறது. அதனால் நமக்கு ராஜ்ய அந்தஸ்த் தும், செவமும், அரசரின் சம்பந்திகள் என்ற புகழும் நம் செல்வி பட்டத்தரசி என்ற மகா பாக்கியமும் பின் அவளது செல்வன் வேங்கி மா மன்னனாக, பரந்த இந்த ஆந்திர நாட்டை ஆளும் தகுதி பெற்றால் அதைப்போல் பாக்கியம் நமக்ககேது? ஆகவே இதை நமது பூர்வஜன்ம புண்ணியமாக கருதி நம் வாசவியை அவனுக்கு மணம் முடியுங்கள் என்று கூறினர்!

அது கேட்ட மற்ற சிலர் எழுந்து, இது மன்ன 'முட்டாள் தனனம்? அவன் மன்னனே ஆனாலும் வைஸ்யன் அல்ல! க்ஷத்ரியன் பழிபாவங்களுக்கு அஞ்சாத மன்னர் பரம்பரையைச் சேர்ந்தவன், நம்இனப்பெண்ணை வேறு இனத்தவனுக்கு மணம்முடிக்க எந்த தர்மம் சரி என்று கூறுகிறது? கூசாமல் க்ஷத்ரியனுக்கு பெண் கொடுத்து கௌரவமும், ஐஸ்வரியமும் பெறலாம் என்று கூறுகிறீர்களே? நம் மானம், அந்தஸ்து நம் இன குல தர்மம் இதெல்லாம் காற்றில் விட்டுவிட்டீர்களா? என்று வெகுண்டு கூறினர்.

பின் மன்னன் விஷ்ணுவர்த்தனன் கருத்தரிய ருஷ்யசிங்க அகத்தியர், பிலகலர் முதலிய வைசியப் பிரமுகர்களை மன்னன் விஷ்ணுவர்தனனிடம் தூதாக அனுப்பினார் அவையோர்.

## அத்தியாயம் எட்டு

வைசிய பெரியோர்கள் ராசமகேந்திரபுரம் மன்னரின் அவை அடைந் தனர். மன்னன் அவர்கள் தம் பெண்ணை திருமணம் செய்யநிச்சயம் செய்துகொள்ள வந்ததாய் எண்ணி, தம் திருமணம் எப்படி ஆடம்பரமாக நடத்தப்படவேண்டும் என்ன முறைகளைப் பின்பற்ற வேண்டும் என்றும் தனக்கு பெண் தருவதால் வைசியர்கள் அடையும் சௌபாக்கியங்களையும் விவரித்தான் மன்னன்

ஆனால் வைசியப் பிரமுகர்களோ ' மன்னர் பெரும' தங்கள் அழகு வீரத்திற்கு ஏற்றவள் எம் குலமங்கையல்ல! க்ஷத்ரிய இன மங்கைதான் ! தர்மத்திற்கு மாறாக எம் இன மங்கையை கேட்பது உசிதமலல ஆகவே தங்கள் தகுதிக்கேற்ப உம இனமங்கையை மணந்து ஆனந்தமாயிருமின் !என்று உரைத்தனர்

மதியமைச்சர், எம் குலத்தில் பெண் இல்லையென்று உம்மை கேட்கவில்லை உம் பெண் அழகில் மயங்கியும் கேட்கவில்லை ! நீர் எமதுசிற்றரசர்களில் ஒருவர்! எம் ஆணையை ஏற்கவேண்டும் அதன் நன்மைககளையும் சீர்தூக்கவேண்டும் !
என்று கூற வைசியர்கள் மன்னர்க்கு பெண் தரமாட்டோம் என பணிவுடனே மறுக்க மன்னன் வெகுண்டு அந்த வைசியர்களை சிறையிலடைக்க உத்தரவிட்டான்

ஆனால் வைசியர்கள் அஞ்சவில்லை '' மாமன்னா ! சிறைக்கு அஞ்சுவர் அல்ல நாங்கள். வீரமும் வைராக்கியமும் தர்மமும்,

சத்தியமும், எங்கள் பரம்பரை ரத்தத்தின் உறவுகள் ! இறைவன் சங்கரனின் ஊழித்தாண்டவமும் அஷ்டதிக்கு பாலகரின் கோபமும் மன்னரின் சினமும், சமுத்திரங்களின் பொங்கும் தன்மையும் எவராலும் தாள இயலாது! ஆனால் மன்னா! எம்மை சிறையி லிட்டு எம்குல மங்கையை சிறைப்பிடித்து எம் நாட்டை அக்னிக்கு இரை ஆக்கினாலும் சரி. எமக்கும் சரி எம் பெண்ணுக்கும் சரி உம்மை மணப்பது கனவில் கூட நடவாத காரியம் !

ஆனால் எம்மை அச்சுறுத்தி எதையும் சாதிக்க இயலாது நீர் போர் முரசு கொட்டினால் நாமும்போர் முரசு கொட்டுவோம் உன்னை வெல்வோம்! அல்லது நாங்கள் அனைவரும்வீரமரணம அடைவோம் - எம் பெண் ஒருபோதும் உம் கரங்களில் உயிருடன் கிடைக்கமாட்டாள் ! என வீரமாக மொழிய மன்னர் வெகுண்டு இந்த கொடியவரை உடனே சிறையில் அடையுங்கள் ! மன்று உத்தரவிட்டான்.

எந்த தியாகத்திற்கும் நாங்கள் தயார்தான் மன்னா ! என்று அவர்கள் பகர்ந்தனர்.

அமைச்சர் தலையிட்டு மன்னரை சாந்தப்படுத்தி அன்பு மூலம் தான் அவர்களிடம் பெண்ணைப் பெற முடியும் என்றுஅவர் களை விடுவித்து பெனுகொண்டாபுரிக்கு அனுப்பி வைத்தார்,

# அத்தியாயம் ஒன்பது

விஷ்ணுவர்தன் மன்னனிடம் சென்றவர்கள் பெனுகொண்டா புரியடைந்து. மன்னன் கோபத்தை குசுமசிரேட்டியிடம் எடுத்து ரைத்தனர் குசுமசிரேட்டி உடனே தம் தூதன் 18 புர வைசியர் களை வரவழைத்தார். அவர்களது அபிப்ராயத்தைக் கேட்டார்.

ஒரு வருணப்பெண்ணை மற்றொரு வருணப்பையனுக்கு தருவது கூடாது! என்று பராசர ஸ்மிருதியில் கூறப்பட்டுள்ளது என்று சிலர் கூற வீர நாரயணபுரவாசிகள் கமலாட்சகன், விசா லாட்சகன் இருவரும் எழுந்து 'க்ஷத்ரிய வீர மன்னர்க்கு பெண் தர நாம் பெண் அதிர்ஷ்டவதி.''மாமன்னரின் பட்டமகிஷியாக நம் குலத்தை உயர்த்துவாள்! ஆகவே உடனே திருமணத்தை நடத்த ஆவேசமாய் முழங்கினர்

ஜகன்னாதபுரவாசி பத்ரய்யசெட்டி கோபத்துடன் எழுந்து 'தம் வர்ணாசிரம தர்மத்தை விட்டு மாறுபட்டதை கைப்பற்று வோன் தர்மத்தை விட்டு நரகத்தையே அடைவான்! என்று ஆக மத்தில் எழுதியுள்ளது. ஆகவே நம்குல வழக்கப்படி தான் செய்ய வேண்டும்! என்றார். இப்படி வாதமும் பிரதிவாதமும் மிகுந்து எழவே குசுமசிரேட்டியார் இறுதியில் ஒன்றுரைத்தார்.''வைஸ்ய வள்ளல்களே இங்கே18புரவாசிகளும் உள்ளனர்.இதில் உங்கட்கு சிறிய ஒரு பரீட்சை வைக்கிறேன். நமது செல்வியை மன்னன் விஷ்ணுவர்தனனுக்கு தரக்கூடாது என்று பகர்பவர்கள் தயவு

செய்து வலதுபக்கம் உள்ள ஆசனங்களில் சென்று அமருங் கள். மற்றவர்கள் இருந்த இடத்திலே இருமின் ! இது நம் நம் இறைவன் வைகுண்டவாசன் ஆனையாகச்சொல்கிறேன்! என்று கரம் கூப்பிட்டுக்கொள்ள 201 கோத்திரத்தார்கள் எழுந்து ஆவேசமாய், நம் செல்வியை விஷ்ணுவர்தனனுக்குத் தருவது அதர்மம் : அநீதி இதை நாங்கள் வன்மையாக எதிர்க்கி றோம்கண்டிக்கிறோம் என்று முழங்கியபடி வலது பக்கம் இருந்த ஆசனங்களிலிருந்த ஆசனங்களில் சென்று அமர்ந்தனர்! அமர்ந்து, புகழ், பொருளுக்கு இத்தகைய ஈனமான செயல் செய்வது விட அக்னியில் நம் பிராணனை தியாகம் செய்வோம் !என்று முழங்கினர்!

அப்போது அதே இடத்தில் அமர்ந்துள்ளவர்கள் அனைவரும் எழுந்து, எம் ஏகோபித்த விருப்பம் மன்னன் விஷ்ணுவர்தனனுக்கு வாசவியை தரவேண்டும் என்பது இல்லையேல் அவனது படை நம்மை அழிக்கும்-நம்நகரம் தீயில் கொளுத்தப்படும். நம் செல்வி யை அவன் சிறை எடுப்பான்! ஆகவே நாம் சந்ததியருடன் அழிவதைவிட திருமணம் மேல் என்று முழங்கினர்! உடனே 102 கோத்ரத்தார் நம்மிடமும் படை உள்ளது. அவனுக்கு எதிரே போராடுவோம்! அவனை வென்று ஆணவத்தை அடக்குவோம்! இல்லையேல் வீர சொர்கம் அடைவோம்: அதைவிட்டு அவனிடம் அவனிடம் பயப்படுவது கோழைத்தனம்!என்று மறுத்து கூறினார் '102 கோத்திரைத்தார்.

ஆனால் 612 கோத்ததார் 'உங்கள் விபரீத புத்தி-விபரீதத்தை விளைவிக்கும். அம் மன்னன் நம்வம்சத்தையே பூண்டோடு அழிப் பான்! பிறகு நம் சந்ததி எவருமே இருக்கமாட்டார். எனவே நாங்கள் பிரிந்து எங்கோ சென்று பிழைத்துக் கொள்கிறோம். ஒருபோது நீங்கள் மனம் மாறி விஷ்ணுவர்தனுடன் சம்பந்தம் செய்தாலும் கூட நாங்கள் இனி உங்களிடம் திரும்ப மாட்டோம்!

என்று தத்தம் குடும்பங்களுடன் வெளியேறினார்கள்!

இது கண்ட 102 கோத்ரதார் தம் தலைவரை நோக்கி பிரபு !

அவர்கள் போனது பற்றி கவலை வேண்டாம்? வீரன் ஒரே முறை சாகிறான் ! கோழையோ பயந்து பயந்து பலமுறை செத்துச் செத்துப் பிழைக்கிறான்! அது ஒரு வாழ்க்கையல்ல! எங்கள் பலம் உடல், மனம், ஆன்மா, செல்வம் யாவும் உங்கள் பக்கம் தான் சத்தியம், நேர்மை, தர்மம் சமுகம் நாடு, அன்பு இவைதான் நம் இலட்சியங்கள் உயிர் உள்ளவரை தங்கள் சொற்படி நடப் போம். அந்த நீசமன்னன் நம் மீது படையெடுத்தால் அவனை எதிர்த்து தர்மத்தை துணைக்கொண்டு நம் படை வலிமைவால் போரிட்டு, அவனை அழிப்போம்: அல்லது நாம் வீர சுவர்க்கம் புகுவோம். நம் பெண் மகாபுத்திசாலி! ஆய கலைகள் பயின்றவள் அவளை அவன் கை தொட இயலாது. ஆகவே விஷ்ணுவர்த னுக்கு நம் பெண்ணை நிச்சயம் தர இயலாது என்று கூறிவிடு வோம் என்று கூற குசுமசிரேட்டியிடம் அமைச்சர் நம் குலுக்கொடி வாசவியின் முடிவு எப்படி எனக் கேட்டறிந்து பிறகு தீர்மானம் செய்யலாம் என குசும சிரேட்டி வாசவியை அழைக்க செய்தார்;

பிறகு குழந்தாயி ! உனது அபிப்ராயத்தைச் சொல்! என்று கேட்க ஜகத்ஜனனியான நம் அன்னை வாசவி கூறுவாள் 'என் அருமைத் தந்தையீர்! இதற்காக எவரும் லவலேசமும் கவலைப் படவேண்டாம். இறைவன் யார்யாருக்கு எப்படியுள்ளதோ அப்படித்தான் நடக்கும் அதில் ஒரு அணுவும் பிசகாது. இறை- யவன் என்னும் அந்த மகாசக்தியை தமது பிரயத்தனத்தாலும் சமர்த்தாலும் எவரும் மாற்றிவிடவோ, நிறுத்திவிடவோ, இயலாது! நம கடமை; நமக்கு உயிரை விட மானமே பெரிது,

அந்த மன்னன் அக்ரமமாக பிரவேசித்து நம்முடன் போரிடினும். நாம் பதிலுக்கு போரிடினும் பயன் என்ன ? இரு தரப்பிலும் எண்ணற்ற உயிர்கள் பலி! சேதம்! இப்படி நமதுசுயநலத்திற்காக ஒன்றுமறியாத பாமர உயிர்களை பலியிடுவது எங்ஙனம்நியாயம்? தர்மங்களிளே சிறந்தது அகிம்சா பரமதர்மம் ! ஆகவே நமக்கு யுத்தமும் ரணமும் தேவையில்லை. காமம் குரோதம் ஆகிய 5 எதிரிகளை எதிர்த்து நம் உள்ளத்தில் யுத்தமிட்டு அதை வென்றால் அதுதான் உண்மையான வெற்றி! அழியாத இன்பம் ; எல்லா யுத்தங்களிலும் ஜெயிப்பவன் பகவான் ஒருவன் தான்!

நமக்கு வேண்டுவது ஞானமும், திட வைராக்கியமும் !

கர்மசிரத்தையும் தான்? சரீரசுகமல்ல ! ஆத்ம சுகம்,அந்த ஆத்ம சுகம் நமக்கு எல்லையற்ற மோட்சத்தையே கொடுக்கவல்லது. அந்த மோட்சத்தை மானிடப் பிறவியில் தான் அடைய முடியும் சரீர இச்சைகள், சுகங்கள், தன் தான்யங்கள், பெண்கள், பசுக்கள் யாவும் மாயைதான் ! இது வீடு பேற்றுக்கு உதாவாது. நமது புண்ணியம் மட்டும் தான் துணைவரும்! அரிது மானிடராய் பிறப்பது, அது கிடைத்ததும் நம் ஜீவன், முக்திக்கு அத்ம சுத்தி யடையாதார் அந்த நித்திய ஜவனைப் பெற முடியாது. இறையன்பு புராண இதிகாசங்கள், நற்குடிப். பண்பு பெரியோரின் வாழ்க்கை வரலாறுகள் தர்மசிந்தனை முதலியவைகள்தான் அந்த மோட்சத்தை கிடைக்கச் செய்யும் பாதைகள்! ஆன்ம விசாரம் காண வெளிசுகத்தை நீக்கவேண்டும், லௌகீகம் பற்றை வளர்க்கும், ஆன்மாவைக் கெடுக்கும், ஆகவே திடத்துடன் செயல்பட வேண்டும்.

சம்சார சாகரத்தில் விடுப்பட்டு. அக்னிஜுவாலையானது மஆன் சுகத்தில் முழ்கவேண்டும். அதைத்தான் தவம் என்று

ஞானிகள் பகர்வர், தவமானது ஞானத்தையும், வைராக்யத்தை யும் முடிவில் மோட்சத்தையும் கொடுக்கும். தண்ணீர் அழுக்கை நீக்கும். நம் ஆத்மா உடலின் விசாரத்தை நீக்கும். அகங்காரம் நீக்கி நம் உள்ளம் தூய்மை பெறும். ஆகவே என்னை ஈன்ற தந்தையீர்! நீவீர் உலகக் கவலைகள் நீங்கி பேரின்பத்தை (மோட்சம்) பெற வேண்டிய முயற்சிகளைத் தேடுங்கள். வெகு சிரமப்பட்டு பெற்ற இம்மனித உடலை பாசபந்தத்தில் ஈடு படுத்தி கழிப்பது இழி செயலாகும் ஆகவே நாம் பொய்யான இவ்வாழ்வு, அதன் இன்பம் அடைய முயற்சிப்பதே நமது உறுதி யான கடமை! என்று அன்னை முடித்தாள்.

இதைக் கேட்ட வைசியர்கள் நாம் அழியும் இவ்வுடலுக்காக இத்துணை நாட்கள் வீணாகக் கழித்து விட்டோமே! அழியாத ஆன்மாவையும் நாம் பிரவேசிக்கும் மோட்ச சாம்ராஜ்யத்தை யும் சிறிது நேரம் கூட யோசியாமல் இருந்தது எத்துணை அறி யாமை? நம் குலக்கொடி இன்று நம்கண்களைத் திறந்துவிட்டன் பரப்பிரும்மாய் உள்ள இந்த உபதேசங்களை ஏற்று நாம் ஆன் மாவை உயர்த்த வழி காண்போம்! உலகப் பற்று, பொருள். பாரம், புகழ், முதலிய க்ஷணத்திலே அழியும் என்றும் அழியாது ஈசுவர் பக்தி ஒன்றுதான்! என்று கூறி வாசவியைப் புகழ்ந்து பிறக்கும்போதே பராசக்தியின் அவதாரமாக திவ்ய சொருபத்து துடன் பிறந்து ஆதிபராசக்தியின் அவதாரம் என நிரூபித்து துட்ட நிக்ரசும் சிஷ்ட பரிபாலனம் செய்யவே ஜனித்தாய்! உன் னையே கதி என்று நம்பினோம், நீயே எம்மை காப்பாய் அந்த விஷ்ணுவர்த்தனுக்கு நற்புத்தியை அளித்து. நம்மை இந்த இக்கட்டிலிருந்து நீயே காப்பாற்று, அன்னை ஜனனி! என்று பலவாறு பிரார்த்தனை செய்தனர்!

'' அன்னையின் விஸ்வரூபத் திருக்கோலம் ''

அவர்கள் பார்க்கையில் திடீரென வானம் முதல் பூமி வரை மிகப்பெரிய ஒளி உண்டாகியது. பெருஞ்சப்தம், அண்ட சராசரங்கள் அனைத்தும் அதிர்ந்து விழுவதுபோல மிகப்பெருஞ்சப்தம் உண்டாயிற்று. அனைவரும் அச்சமுற்று கண்களை மூடிக் கொண்டனர். உடனே ஒரு அசரீரி தோன்றியது'' வைசியர்களே நீங்கள் எவருமே அஞ்சவேண்டாம்.

''...........உங்களைக் காத்து ரஷிக்கவே அம்பிகையாகிய நாமே அவதரித்தோம். நமது திவ்ய சொரூபத்தை கண்டுகளியுங்கள். ஆனால் எமது தரிசனத்தை இந்த சாதாரணக் கண்களால் காணமுடியாது. அகக்கண்கள் மூலம் தான் காணவேண்டும், அதற்கு முன்னே ஒரு திரை உங்கள் அகக் கண்களை மூடியிருக்கிறது. நமது திருவருளால் அத்திரை விலகியுள்ளது. இனி நமது திவ்ய சொரூபத்தைக் கண்டு ஆனந்தியுங்கள்! என்றாள் அம்பிகை.

உடனே அனைவரும் மெய் குழற கண்கள் கண்ணீர் பொழிய் கரங்கள் தலைமேல் குவிய நாத்தடுமாற 'ஜகத்ஜனனி - தாயே அம்பிகை வாசவி! மனோகரி! என்று பிரார்த்தித்து அன்னையின் அருட்காட்சியைக் கண்டு களித்தனர். ஆனந்தக்கடலில்முழ்கினர்

அன்னையின் திருக்காட்சி தரிசனம்

கோடி சூரியர்கள் ஒரே நேரத்தில் தோன்றியது போல் பிரகாசமும் அநேக கோடி சந்திரர்கள் தோன்றியது போன்ற அமுத கிரணத்தின் தன்மையும் பொற்பிரவாகம் போன்ற மகா திவ்ய சரீரமும், நவரத்தினங்கள் இழைத்த கிரீடமும், பிறைநுதலை போன்ற நுதலின் பொட்டழகும் சூரியனும் சந்திரனும் போல்

விளங்கும் இரண்டு கண்களும் காதுகளில் நெருப்பை போல் பிரகாசிக்கும் வைரத் தோடுகளும், வெண்ணிலவு போல் புன்னகை பூக்கும் குமுதச் செவ்வாயும், பிறவித் துயர் நீக்கும் திருமொழியும் எண்ணிலா அருள் மழை பொழியும் முக மண்டலமும்

இரத்தின மாணிக்கம் இழைத்த ஆரம், நூபுரம், கங்கனம், மேகலை ஆகிய ஸ்வர்ணாபரணங்களும் அதியற்புத சோபையுடன் கூடிய ஒளி வீசும் பட்டாடையும் சொல்லற்கரிய சிறந்த மணம் வீசும் மலர்களால் செய்யப்பட்ட புஷ்ப மாலைகளும், பத்மம் பாசம் தாங்கிய திருக்கரங்களும். சதுர்புஜங்களும் மெய் ஞானம் திகழும் திருமேனியும் கொண்டு ஆயிரம் இதழ்கொண்ட அற்புத தாமரை மலரின் மீது தம்திருவடி இரண்டும், தம் கிரீடம் அந்த தேவாலயத்து மண்டபத்தில் மேற்படும்படி பெரிய திரு உருவத்துடன் விளங்குவதை வைசியர்கள் அம்பிகையின் திருவருள் தந்த அகக்கண்களால் கண்டார்கள்

## அன்னையின் விஸ்வரூபத் திருக்கோலம்

இப்படிப் பார்க்கையிலே அங்கிருந்த தேவாலயமும் மற்றும் இதரவைகள் யாவும் திடீரென இவர்கள் கண்களுக்கு மறைந்து விட்டது. எங்கு நோக்கினும் நமது அன்னையின்சொரூபமாகவே காணப்பட்டது. அன்னையின் சரீரத்தின் கண் நூறாக, ஆயிரமாக கோடிகளாக நிறங்களும், அளவுகளும் கொண்ட எண்ணற்ற வடிவங்களைக் கண்டார்கள். சூரியர், சந்திரர், நட்சத்திரங்கள் விசுக்கள், தேவர்கள், திக்குபாலர்கள், பூத பைசாச தேவகணங்களு, எண்ணற்ற தாமரை மலர் சிருஷ்டி கர்த்தாக்களாகிய பிரமாக்களும், சத்தியலோகங்களும் காக்கும் கடவுளாகிய நாராயணர்களும், வைகுண்டர்களும், ருத்ர மூர்த்திகளையும் ரிஷிக்கூட்டம், ஞானிகள், பாதாளலோக வாசிகள் நரகங்கள் சுவர்க்கங்கள் ஆதில் அதிபயங்கரத் தோற்றங்கள் எழில் வடிவங்கள்

இந்திராதியர்கள் வானவர், மக்கள், கின்னரர், கிம்புருடர், கந்தர்வர், அசுரர்கள் மாமலைகள், மகாநதிகள், கடல்கள், சோலைகள், நகரங்கள் வயல்கள், அண்ட சராசரங்கள் அதன் அதன் அமைப்பின் விசித்ரம் யாவும் கண்டனர்.

அந்த உருவத்திலே எண்ணற்ற கோடித் தலைகளும் கை களும், கால்களும், சரீரங்களும். கண்காதுகளும் கண்டனர் ஸ்வர்ண கிரீடங்கள், மலைத் தோற்றம் கொண்ட அளகாபரம் ஞானிகட்கு நல்லருளும் யோகியர்க்கு அருள் வழங்கும் ஞான நேத்திரம் கொண்ட நுதலும் அடியார் அனுக்கிரணம் செய்யும் திருக்கண்களும் வேதம் ஆகமம் ஞான உபதேசம் செய்யும் திருவாயும் அடியார் துதிக்கும் தோத்திரங்கள் கேட்கும் செவிக ளும் அடியார்க்கு அருள் வழங்கும் பல முகங்களும் கண்டார்கள்

அண்ட சராசரங்களும் தவிடுபொடியாக்கும் கோர சிரிப்பு சிரித்து சிவந்து உருண்ட கண்களிலே அக்னிப் பொறிகள் பறக்க மகா கோபத்துடன் அஞ்ஞான விருக்ஷத்தை அறவே சுட்டெரிந்து திருமுகங்களையும், அநேக கோரப்பற்களையும் பகுவாய்களை களையும் வடவாகனி கக்கும் தீ நாக்குகளையும் முகங்களையும், கொண்ட மிகப்பெரிய பயங்கர வடிவங்களையும் கண்டனர்.

அத்திருவுருவின்கண்ணே இந்த பூமியையும் நமது பாரத நாட்டையும் கோதாவரி நதியையும் பெனு கொண்டாபுரி நகரை யும் பதினென்புரங்களையும் தேவாலயங்களையும், அன்னை ஸ்ரீ வாசவியையும், வைசியர்களையும் விஷ்ணுவர்த்தனன் நாட்டையும் கண்டனர். அந்த மன்னனின் அகங்கார தீயகுணங் கள் காமம் யாவும் தனியே ஒரு வடிவம் தாங்கி அம்பிகையின் குரூர உருவத்தில் ஒன்றில் வாய்க்குள் புகுந்து கோரப்பற்களுக் கிடையே சிக்கி அரைபட்டு தவிடு பொடியாவதும் மாண்டு வீழ் வதையும் கண்டார்கள்.

இப்படி பல்லாயிரம் கோடி அண்டங்களையும் தன் வசம் கொண்டு விளங்கும் அத்திவ்ய சொரூபத்தை மீண்டும் மீண்டும் பார்த்து பார்த்து பரமானந்த பரவசம் எய்தி தம் வசமிழந்து நின்றனர் !

'அண்ட சராசரங்களையும் ஆக்கி, காத்து, ரஷித்து அருள் பாலித்து வரும் ஆதி பராசக்தியாகிய லோகமாதாவை இன்று தரிசித்துவிட்டோம் ? இது நாம் முன்னம் செய்த தவப்பயனே! இதை தேவர் மூவரும் காண இயலாதே! என்ன நமது நற்பேறு இதை எழுத்தால் எழுத இயலுமா ? இப்படி பரவசப்பட்டனர் வைசியப்பெருமக்கள் அவர்களது ஆணவம் வெகுளி நீங்கி, பக்தியும், ஊக்கமும் தோன்றியது ரோமஞ்சனம் உண்டாகியது. வலது கண்ணும் தோளும் துடித்தன. இவ்வுலகப் பற்றுகள் நீங்கின. தம் வசமிழந்து பரவசம் எய்தினர்.

''ஆகா நமது குழந்தையாக இருந்தது அன்னை ஜகன் மாதாவின் விளையாட்டு! இந்த ஜகன் மாதாவை நினைக்க விஷ்ணுவர்தனனுக்கு என்ன தகுதி உண்டு! இந்த மகா சக்தி யின் முன் அவனது படைபலம் யாவும் தீயிக்குள் நெய்யாக மறைந்துவிடுமே! இதுவே நம்வாழ்வின் நன்னாள்!பொன்னாள்! நம்ஜன்மம் சாபல்யம் அடைந்துவிட்டது முக்திநிலையும் அடைந் துவிட்டோம்! ஜெய்ஜனனீ! ஜெய்வாசவி! ஜெய்பராசக்தி என்று பாடியும் ஆடியும் ஆனந்தித்து மனதார அவளை வாழ்த்தி அனைத்துலகம் ஆளும் பரஞ்சோதியே! சர்வதயாபரி! எங்களை இப்பிறவி பெருங்கடலினின்றும் நீக்கி பேரின்பக் கடலில் சேர்ப்பி பாய் அன்னையே! என்று உள்ளம் உருக, மெய்சோர, கண்ணீர்மல்க துதித்தனர்.

அச்சமயத்தில் நமது குலதெய்வமாகிய வாசவிதேவி தன் கிருபையால் இவர்களை ஆசிர்வதித்து ''அன்பும் பண்பும் உள்ள வைசியர்களே! அஞ்சற்க! உமக்கு எவ்விதத் துன்பமும் நேராது. உமக்கு துன்பம் தந்தவர்களை அழித்து உம்மைக்

காக்கவே நாமே இங்கு உங்கள் குலத்தில் அவதரித்தோம். விரைவில் முக்தி இன்பத்தை உமக்கு அருள்வோம். நீங்கள் யாவரும் சென்ற பிறவியில் எம்மை நோக்கி கடுந்தவம் இயற்றினர். தற்சமயம் குசுமசிரேட்டியாக உள்ள இவ்வுத்தமர் சுராதி என்ற வைசியராக தவம் இயற்றினார் அத்துடன் 'சுரதன்' என்ற ஷத்ரியரும் தவம் இயற்றினார். நாம் பிரசன்னமானோம் சுரதன் தனக்கு மனுப்பதவி வேண்டும் எனப்பெற்றான். ஆனால் சுராதியோ, தாங்களே எம் குலத்தில் துணையாக இருந்து வழி நடாத்தி தங்கள் திருவடி நிழலாகிய மோட்ச சாம்ராச்சியத்தையும் நல்கவேண்டும் எனப் பிரார்த்தித்தார். 'அப்படியே ஆகுக' என வரம அளித்தோம்.

அதற்கேற்ப உங்கட்கு ஜீவன் முக்தியை விரைவில் தருகிறோம். உங்கள் இளைஞரும் யுவதிகளும், பாலரும், பாலகியரும் இன்னும் சில காலம் வாழ்ந்துதான தருமங்கள் செய்து உலகிற்கும் நன்மைகள் செய்து பின் எம்மையடையட்டும்! உலகைகாக்க சாட்சாத் மகாவிஷ்ணுவே விருபாதனாக அவதரித்துள்ளார். அவரால் அனைவரும் ஷேமங்களும் மங்களங்களும் பெறுவர், நீதி நிலைக்கும் ஆகவே விருபாஷனுக்கு உதவியாக இளைஞரும் யுவதிகளும் ஈடுபட்டு சேவை செய்யட்டும். விஷ்ணு வர்த்தனனால் எவ்விதத் தீமையேனும் நேருமோ என அஞ்சற்க அவ்விஷயத்தை நாம் கவனித்துக் கொள்வோம்! ஏனெனில் அவனும் முக்தியை அடைவான். பூர்வத்தில் அவன் பரமேஸ்வரன் நெற்றிக்கண் எரித்தசாம்பலில் (மன்மதன் சாம்பல்)தோன்றி பண்டாசுரன் என்ற அரக்கனாக உலகை அழித்தான். நாம் லலிதா என்ற உருவந்தாங்கி அவனை அழித்தோம். பின் சம்பாசுரன் என்று தோன்றி மற்றவரை வாட்டினான். நாம் சண்டிகை வடிவம் தாங்கி அவனை சம்காரம் செய்தோம் பின் சென்ற பிறவியில் 'சித்ரகண்டன்' என்ற கந்தர்வனாய் தோன்றி நம்மை பூஜித்தான் இப்பிறவியில் அவன் முக்தியடையப் போகிறான்.

அவன் காமனது சாம்பலில் தோன்றியதால் காமவசப்பட்டு-பூர்வவாசனை அவனை இக்கதிக்கு உள்ளாக்கியது. இப்போது அவன் அகங்காரம் அழிந்து செம்மையுற மனத்தினால் நமது திருவடிகளை அடைவான். ஆதலால் அஞ்சற்க?

விரைவில் உமக்கு ஞானோபதேசமும் ஜீவன் முக்தியும் அளிக்கிறோம், உலாவப் பேரின்பம் துய்க்கும் காலம் உமக்கு நெருங்கியுள்ளது!'' என்று கூறிமுடித்து விசுவரூபத்தை மாற்றி சாதாரண பெண்ணாக தன்னை மாற்றிக்கொண்டாள் அன்னை!

அது கண்ட வைசியர்கள் இது கனவோ நனவோ என்று பின் வணங்கி அம்பிகாசக்தியின் பெருமையை எண்ணி மகிழ் வெய்தினர்.

# அத்தியாயம் பதினொன்று

## அன்னை வாசவியின் உபதேசம் :

அன்னை வாசவியின் தரிசனம் (விஸ்வரூபதரிசனம்) வைசிய பெருமக்களின் மேனியெல்லாம் சிலிர்க்கச் செய்தது. அவளின் சக்தி, பிரவாகம், தெய்வீகம், ஞானஒளி பேரழகு அழியாத இள நகை, உயர்வலிமை, சொல்லின் இனிமை அதில் ஒளி தூய்மை அருள்மழை பொழியும் கடைக்கண் நோக்கம் ஆகியனபலருக்கும் நினைவில் வந்தன. அன்னை அப்போது நமது இளையதலை முறையினருக்கு சில நீதி மொழிகளைப் புகலத் தொடங்கினாள்

' பரமாத்மா, பரப்பிரும்மம் என்பது ஒன்றுதான் அது எங்குமே நிறைந்தது. ஆதியும் அந்தமும், முடிவும் துவக்கமும் இல்லாதது. நித்யமானது, சத்தியமானது ஆகவே உருவம் அருவம், இரவுபகல் எல்லாம் மனம் செயல் யாவையும் நடத்துவதும் அதுவே. அவ்வெள்ளத்தை நமக்கு உதவுபவர்கள் ஞானிகள், மகான்கள் எனலாம் அவ்வெள்ளத்திலே மூழ்கி ஆனந்தக் கடலில் மூழ்குவதுதான் நமது ஆனந்தம் ! பிரும்மானந்தம் ! மோட்சானந்தம் !! அதுதான் உண்மை சுகம். ஞானிகளால் தான் உலகம் சுபீட்சமாயும் புகழுடனும், வாழ்கிறது. சத்தியமும் தர்மமும் செழிக்கிறது. இவர்களது தூயமொழிகள் தான். அதன் மகிமையால்தான் இப்பரத கண்டம் ஷேமம் அடைகிறது. அத்தகைய தூயமொழிகள் தான், அத்தகைய துயமொழிகள்தான் வேதங்கள். அவ்வேதங்களை அத்ரி, மரிசு, ஆங்கிரசு, பாரசர் பரத்வாசர் முதலான மஹரிஷிகள் வாயிலாக வந்தது. அதை வியாசபகவான் அணுகி ஆய்ந்து ருக், யசூர், சாமம், அதர்வனம் என்ற நான்கு வேதங்களைத் தொகுத்தார். பின் அதை பீலகர்

வைசாம்பயனர், ஜைமினி, சுமந்து என்ற நான்கு மகா யோகி கட்கு பயிற்றுவித்தார். இவர்கள் வாய்வழியே வேதம் பல கிளை களாய் பிரிந்து ருக் 21 சாகைகளும் சாமவேதம் 1000 சாகைகளும் அதர்வன வேதம் 50 சாகைகளையும் கொண்டதாய்ப் பிரிந்தது. இவைகள் மட்டுமே உலகில் வழங்கி வருகிறது.

உலகில் தோன்றும் மக்கள் வேதம் முழுதும் அத்யனம் செய்ய இயலாது. ஆகவே. கிருஷ்ணபையனார் ஒரு மனிதன் எவ்வளவு பாகத்தை எளிதில் அத்யானம் செய்ய முடியுமோஅவ் வளவை ஒரு பிரிவாக பிரித்தார். ஆகவே சாகைகள் என்று வழங்கப்படும். வேதங்களை வகுத்தது வியாசர். ஆகையால் அவரை வேத வியாசர் என்று அழைப்பர், உலகிற்குத் தேவை யான முக்கிய வேதங்களை 1180 சாகைகளாகப் பிரித்துத் தந் தார். அதில் ருக் வேதத்தில் ஐதிரேயசாகை யஜுர்வேதத்தில் கான்வசாகை, தைத்ரீயசாகை, மாத்யன்சாகை என மூன்றும் சாமவேதத்தில் கௌதம சாகை, தலவிகார சாகை என்ற இரண் டும் இப்போது உள்ளது. ஒவ்வொரு சாகையும் பிறப்பு முதல் இறப்புவரை உள்ள கர்மாக்களுக்குஉபயோகமானவிஷயங்களை விளக்குகிறது.

வேதம் அழியாதது. நமது சிந்தைக்கும், புலன்கட்கும் எட்டாத உயர்பொருளை விளக்குவது எதைநிறுத்த இயலாதோ எங்கு நமது மனோசக்தி சென்று காண இயலாதோ எது இந்தி யரிங்கட்கும் அகப்படாதோ அதுவே வேதம் என்பர். மெய் பொருள்பற்றிய எந்நாட்டு அறிஞர்கள் செய்யும் ஆய்வின்பயனே வேதம், பரிபூரணமாரய பிரும்ம சைதன்யத்தை அடைய வழி செய்வதே வேதம்!

மனிதனை சும்மாஇருக்கவிடாமல்ஏதாவது செய்யத்தூண்டி கொண்டே இருப்பது மனம். மனிதனின் துன்பம் அதிகம். அதில் பசி மிகவும் முக்கியம். அதை நீக்க உணவு தேடவேண்டும்.

அதை சேர்த்தும் வைக்கவேண்டும். அதற்கு பொருள் சேர்க்க வேண்டும் ! இப்பொருளைச் சேர்க்க மனிதன் பல தொழில்களை செய்கிறான். அவனுக்கு உதவியாக ஒரு பெண்ணும் தேவைப் படுகிறாள். தாம்பத்யம் ஏற்படுகிறது: சுக துக்கங்கள், கர்மாக் கள், ஆசைகள், 'சந்தானங்கள் தன் குடும்பம் தன் மனைவி தன் பிள்ளைகள் என்ற தன்' எண்ணமும் ஏற்படுகிறது: இதனால் ஆத்மா பழுதாகிறது. பாவம் சேருகிறது, அதை நீக்க அந்த பரமாத்மாவை வழிபடுகிறோம். மேலும் தானதருமங்கள், உதவி களை மற்றவருக்கு செய்து புண்ணியம் சம்பாதிக்கலாம். இதை தருமம் என்று கூறலாம். தருமம் செய்யின் தீமை விலகும் நற் கதி கிடைக்கும். முன்னோர்கள் தாம் செய்த நற்செயல்களை தர்ம நூலாக ஏட்டுச் சுவடிகளில் எழுதிவைத்துள்ளனர் இன்மை தலைமுறையினர் அதைப்படித்து அறிந்து நல்லவை செய்து தர்மத்தை சம்பாதித்து பின் முக்தியடையலாம்

# அத்தியாயம் பனிரெண்டு

மனனம் செய்ய உகந்தது நியாய சாத்திரம். இது கௌத-தம மகரிஷியால் செய்யப்பட்டது. பரமேஸ்வரன் தான் இவ்வுல கின் கர்த்தா என்பதை தீர்மானமாகவே எடுத்துரைப்பது நியாய சாஸ்திரம. ஈஸ்வரனை தரிசிக்க இது துணைசெய்கிறது. வேதங்களையும்,உபநிஷத்துக்களையும சாந்த மனத்துடன் குரு முகமாக உணர்தல வேண்டும. சாந்தியுள்ள நல் மனத்தில் குரு பக்தி என்ற நிர் பாய்ச்சி பிரும்ம உபதேசம் என்ற விதையை ஊன்ற வேண்டும.

புராணம் என்பது வேதத்திற்கு பூதக்கண்ணாடி போன்றது புராணம் பழைய சரித்திரஙகள். வேதத்தை ஆதரித்தவர் பெற்ற சுகத்தையும் அறியாதவர் அடைந்த தீமையையும் விளக்கும் வேதம ஒரு எசமான் இடும் உத்திரவு. புராணம் ஒரு நண்பன் இதயமாய் எடுத்துரைப்பது போன்றது. புராணங்கள் மனதை பக்குவப்படுத்தி நல்வழியில் புகுத்தக்கூடிய சக்தி பெற்றது. புராணங்கள் 18. இது நாலு லட்சம் கிரந்தங்கள் கொண்டவை கிரந்தம் என்பது 32 எழுத்துக்கள் கொண்டது. இதன் ஆசிரியர் வியாசபகவான். இதில சில புராணம் 10 ஸ்கந்தம் என்பது லட்சம் கிரந்தங்களை கொண்டது. உப புராணங்கள் 18.

வேதத்தில் நமக்கு அனுஷ்டானத்துக்குப் பயன்படும் விஷயங் களை சுலபமாக சொல்வது தான் ஸ்மிருதி. இது தான் தர்மசாத் திரம். இதுவே வேதத்தின நான்காவது உபாங்கம. இது சட்ட மல்ல, குறிப்பு, மனுக்ஞவல்கியர், பராசர் கௌதமர், ஹிரிகர், ஏமன், விஷ்ணு முதலியோ ஸ்மிருதிகளை செய்துள்ளனர்.

ஒவ்வொரு மனிதனும் ஞானமார்க்கம் செய்யவேண்டும். பேரின்பத்தை அடையவேண்டும். அது அடையும் வரை இத்தேகத்துக்கு யாதொரு கெடுதியும் வராமல் காக்கவேண்டும். பிணிவந்தபின் மருந்து உண்பதைவிட பிணியே வராமல் தடுப்பதுதான் உத்தமம்.

நோய் உணர்ந்து அது வரும் காரணம் அறிந்து அதை தீர்க்கும் உபாயம் அறிந்து செய்யும் வழி தவறாமல் மருத்துவர் மருத்துவம் செய்யவேண்டும். வாத பித்த சிலேட்டும் வகையான நோய்கள்—அதைக் கண்டுபிடித்து நல்ல வைத்யன் தீர்ப்பான். நோயாளி அவனுக்கு ஒத்துழைத்து மருந்து உட்கொண்டு பத்தியமிருந்து நோயைத் தீர்த்துக் கொள்ளவேண்டும்.

தூய உணவு, நன்னீர், தூயகாற்று, நற்சிந்தனை உழைப்பு முதலியன இருப்பின் மருந்தே தேவையில்லை. தர்மம். நேர்மை, அன்பு, தானம் முதலிய உயர் குணங்கள் மக்களை வாழவைக்கும். புகழ் சேர்க்கும். தீய குணங்களை விட்டு ஆத்ம சுத்தி விளங்கினால் எல்லா நன்மைகளும் உண்டாகும்,

அன்புதான் அனைத்துக்கும் உத்தமம். அடுத்து தானம் நாம் பிரியமாக வைத்துள்ள பொருட்களைக் கொடுப்பது அதை தியாகம் என்றும் கூறலாம். மனப்பூவமாக அதை செய்யவேண்டும். அதன் பலன்கள் இம்மையிலும் மறுமையிலும் மிகுதி. நாம் செய்யும் காரியங்களை சாம பேத தான தண்டம் என்று பாகுபாடு செய்து செயலாற்ற வேண்டும், ஒருவன் தாம் சொல்வதை ஏற்காவிடின் அவனுக்குக் கெடுதல் வரும்படி காரியம் செய்வதும் அவனுக்கு வரும் பிரயோசனத்தைக் கிட்டாமல் செய்வதும் நாம் அவனிடம் பிரிந்து விடுவதும் 'பேதம், எனப்படும்: அவன் பொருளுக்கோ கேடு விளைதல் அதிலும் ஆகாவி

விடின் தண்டம் (அ)திட்ஷ மூலம் பணியவைத்தல் அதாவது உடம்புக்கு இம்சையை நேரடியாக உண்டாக்கல் ஆனால் இது துஷ்டர்கள் விசயத்தில் மட்டுமே பிரயோகிக்க வேண்டும். [துஷ்டநிக்ரகம் சிஷ்டபரிபாலனம்]

மக்களிடம் காமம் குரோதம் லோபம் மதமாச்சரியங்கள் விலக்கி சாந்தி நிலவச் செய்யவேண்டும். வருணாசிரம தர்மத் ஷ்த அனைவரும் அனுஷ்டித்தால் இவை எல்லாம் நடக்கும்! அரசாங்கம் மக்கட்கு வருணாசிரம தர்மம் குறையாமலிருக்க சத்வம், சாந்தம், அன்பு வைதீக அனுட்டா னம் தெய்வபக்தி முதலிய புகட்டும் தூய மகான்களிடம் பக்தி யுடன் உணர்ந்து நடக்க ஆவண செய்யவேண்டும். பக்தரின் குயுக்தி குலைந்துவிடும். தூய பக்தியுள்ள இடத்தில் சகல நன் மைகளும் உண்டாகும். அரசியல், திரவியம், அதிகாரம், பட்டம், குயுக்தி, சாமர்த்தியம், பலம் இவற்றால் சமர்த்தனம் உண்டா காது. துய மகான்களின் தரிசனமும் இதோபதேசமும் இதனை எளிதில் உண்டாக்கும். ஆதலால் அரசாங்கம் மகான்களை ஆதரிக்க வேண்டும்.

அரசர்கள் யுத்தத்தின் போது தர்மயுத்தம் செய்யவேண்டும். எதிரி ஆயுதம் இல்லாதபோது அவனும் ஆயுதத்தைக் கீழே போட்டுவிட்டு மல்யுத்தம் செய்யவேண்டும். எதிரி வில்வீரனாக இருந்தால் அவனோடு வில்லில்தான் பொருத வேண்டும். இதை தனுர் வேதம் என்பது.

அறிவும் பொருளும் தேகபலமும் யாவருக்கும் அவசியமா தலின் ஞானசாத்திரம், அர்த்தசாத்திரம், தனுர்வேதம் முதலிய வற்றை அனைவரும் தெரிந்து கொள்ளல் வேண்டும்.

மாதாக்களிடம பாபதோஷங்கள் இருப்பின் அவைகள் அவர்களின் குழந்தைகளையும் பாதிக்கும். தாய் தந்தையின் துர்குணங்கள் பிள்ளைகளையும் பாதிக்காதபடி சமஸ்காரங்களை செய்யலாம்.

**உபநயனம் :**

அறிவு வந்தபோது செய்யும் சமஸ்காரம். இது இனத்தாருள் பற்பல வயதுகளில் செய்யலாம். பிராமணர் 7 வயதிலும், ஷத்ரியர் 9 வயதிலும் வைசியர்கள் 12 வயதிலும் உபநயனம் செய்து கொள்ளவேண்டும்; உபநயனம் செய்யும்முன் சமஸ்கிருத பாண்டித்யம் பெற்றுளவேண்டும்; அப்போதுதான் உபநயனம் இன்னதென புரியும் பொருள் தெரிந்தால் பக்தி ஏற்படும். பிள்ளைப் பருவத்திலே ஏற்ப்பட்ட பக்தி என்றும் நிலைத்து நிற்கும் மனிதனின் ஆசமங்கள் நான்கு. முதலாவது பிருமச்சாரியம். அது வேத பாராயணம் செய்ய ஏற்பட்ட ஒரு தீட்சை. அதற்கு பூர்வாங்கமாய் ஏற்பட்டது தான் உபநயனம். நயனம் என்றால் கண், கண் ஒருவனை நல்வழியில் நடத்தி செல்வது போல் உபநயனம் உபாத்தியான் சொற்படி நல்வழியில் நடமை நடத்தி செல்லும்.

உபநயனத்துக்குப் பின் சந்தியா வந்தனம் மிகவும் முக்கியம். ஏனெனில் அதில் இன்றியமையாத பிராணாயாமம், அர்கியப் பிரதானம், காயத்ரிஜபம் முதலியன அடங்கியுள்ளது. அதனால் ஆண்மஒளி, உடல்தேஜஸ் 'சிரேயஸ் முதலான உண்டாகும், காயத்ரி ஜபம் முதல் 3 வேதங்களின் சாரம் அதர்வண வேதம் அத்யனம் செய்ய வேறு உபநயனம் செய்து கொள்ள வேண்டும். பிதுர்களை மந்திர சக்திகள் மூலம் [வரவழைப்பது முதலியன அதர்வண வேதத்தில் அடங்கியுள்ளது. யுத்த விசயங்களும், இதர அற்புத விஷயங்களும் அடங்கியுள்ளது.

## குரு

ஒருவன் குருதுரோகம் செய்தாலும், குருவை அலட்சியம் செய்தாலும் அவனை வீட்டில் சேர்க்கக்கூடாது குருகுல வாசத்தில் பிச்சை மூலமே அன்னத்தைப் பெற்று உண்ண வேண்டும். பாதியை குருவுக்கு கொடுத்து தான் உண்ண வேண்டும் பிரும்மச்சாரி உப்பற்ற உணவைதான் உண்ண வேண்டும். ஒவ்வொரு நாளும் சமிதாதானம் செய்யலாம். 12 ஆண்டுகள் குருகுல வாசம் செய்யவேண்டும். அது முடிந்ததும் குருவுக்கு தட்சணை சமர்பித்துவிட்டு வீடு திரும்பவேண்டும்.

பொருளற்றோர் யாசகம் செய்து குருதட்சிணை கொடுக்கலாம் அல்லது குரு கேட்கும் வகையில் வேறுஉதவிகள் செய்து குருவைத் திருப்தி படுத்தலாம். குருவிடமே தங்கி வாழ்வு முழுதும் அவருக்கே அர்பனம் செய்வது நைட்டிகபிருமச்சாரியம் என்பர். விவாகம் செய்யாமல் இதைப்பண்ண வேண்டும்,

## விவாகம் :

சாமவர்தனம் செய்து விவாகம் செய்யாதவன் 'ஸ்நாதகன் காசியாத்திரை பண்ணுகிறவன் அவன்தான். சாமவர்தனத்திற்கு பின் செய்யப்பட வேண்டிய சமஸ்காரம் விவாகம் என்பது. நைட்டிககபிருமச்சாரி சந்நியாச ஆசிரமத்தைக்கொண்டு ஆத்ம ஞானம் திரட்டி அதன் பலனைக் கொண்டு ஆத்மஞானம் திரட்டி அதன் பலனைக் கொண்டு உலகிற்கு நன்மை செய்றான். பௌதீக பிரும்மச்சாரி பொது சொத்தாகிய சிருக தர்மத்தைக் காப்பாற்றி அதன் மூலம் உலக ஷேமத்தை காக்கிறான். கிரகாஸ்ரமே அனைத்திலுமே சிறந்தது! இல்லறம் அல்லது நல்லறமன்று! இல்லறந்தான் அன்புடன் அறத்தைப் பேணி பரோபகார சிந்தையுடன் பொது நலத்துக்கக வாழ்க்கை நடத்த ஓர் சிறந்த சாதனம். உலக நலமே தன் நலமாய் கருதவேண்டும். இப்பெருங் காரியத்திற்கு உதவ தனக்கு ஒரு துணை வேண்டும். அன்பும்

கருணையும் தர்மானுஷ்டமான தன்னோடு ஒத்த துணை வேண்டும். நற்குடியில் பிறந்த தர்மத்தைஅனுசரிக்கத்தக்க இடமாய் பார்த்து அத்துணையை தேடிக் கொள்ளல் வேண்டும். அந்தத் துணை தான் பத்தினி.பதியும் பத்தினியும் சேர்ந்து கிருகதர்மத்தை அனுஷ்டிக்க வேண்டும்.

புருஷன் மனைவின் அழகிற்காகவும் காம இச்சைக் காகவும் வரதட்சனைக்காகவும் மனைவியிடம் பிரியம் வைக்கக்கூடாது. தன்னையே கடவுளாகக் கொண்டு வழிபடும் பத்தினியை, சகல துக்கங்களையும் ஆத்ம உணர்ச்சியையும் இகபர சுகங்களையும் அனுசரித்து தன் வாழ்வுடன் அவள் வாழ்வையும் தூய்மைப்ப படுத்தி தூய சற்குணனாக நல்ல புருஷனாக இருக்கவேண்டும்.

மனைவியும் மனையறத்திற்கேற்ப நற்குணங்களான துறந்தார் பேணல்,விருந்தயர்தல் வறியரிடம் அருளுடைமை முதலியவும் வாழ்வின் பொருளுணர்ந்து கடைப்பிடித்தல் சமையல் தொழில் வன்மை, ஒப்புயர்வு செய்தல், வரவுக்குத் தக்க செலவு நல்வாழ்க்கை நடத்தல் ஆகிய நற்குண நற்செயல்கள் மனைவியிடம் அமையவேண்டும்.

அப்போது இல்லறம் நல்லறமாக மனையாட்சி மாட்சிமை மிக்கதாக அமையும். இல்லாள், கற்பு, என்னும் ஏஞ்ஞான்றும் பூண்டு தன் கணவனே சகலமும் என்று எண்ணி இல்லறம் நடத்தவேண்டும்.

## தெய்வ பலம்

தெய்வபலத்தால் வாழ்க்கை செவ்வனே நடைபெற வேண்டும். தெய்வத்தை நெருப்பு வடிவாய் வழிபட வேண்டும். பரமேஸ்வரனே அக்னி ஸ்வரூபம்தான்! ஒப்ப ற்ற வீடுபேற்றை நல்குவது ஞானாக்னியே! அக்னிபிரும்மம் அது எங்கும் நிறைந்து ஜோதிமயம்! – தேஜோரூபம். அதுதான் ஜோதிலிங்கம்! பிரும்மா, விஷ்ணு ருத்ர ஸ்வரூபம் அதுவே! திருவண்ணாமலையிலும் இன்னும் பல இடங்களிலும் பகவான் அக்னி வடிவாக அர்ச்சிக்கப்படுகிறார். தீபம் ஏற்றி அம்பிகை லட்சுமி, காமாட்சி என்று வணங்குவர். நானும் பரமேஸ் வரனும் வேறல்ல! இரண்டுபேருமே ஒரே வடிவம்தா ன் அதை பிரும்மஸ்ரூபம் எனலாம். அது நித்தியானந்த ஜோதி. அதை அக்னியாக வழிபடவேண்டும் மந்திரபூர்வமாய் வழிபடவேண்டும். அப்போது இகபரசுகங்கள் கிடைக்கும். துன்பம், பயம் பூதப்ரேத பிரேத பிசாசுகளின் இடையூறு எது வும் அணுகாது. விவாகத்தில் அக்னியே சாட்சியாக்கப்படுகி றது ஆகவே பரமேஸ்வரனே சாட்சியாகிறார். அக்னிசாட்சி பரமேஸ்வரனால் காக்கப்படுகிறது. ஆசீர்வதிக்கப்படுகிறது. ஒவ்வொரு கர்மாவும் அதற்கேற்ற மந்திரங்களை சொல்லி திரிகரண சுத்தியாக செய்யப்படவேண்டும். அனைத்து கர் மாக்களுக்கும். மந்திரங்கள் உள்ளது. ஒவ்வொன்றாலும் தன க்கோ பிறருக்கோ உலகிற்கோ சேஷமங்கள் உண்டு.

விவாகம் குறைந்த பொருட் செலவில் செய்தாலும் தப் பில்லை. கல்யாணக் காரியத்தை சரிவரச் செய்ய வேண்டும். எல்லாக்கிரியைகளும் கிரேயசைத்தருவன! சம்பத்தை வளர்ப் பனவே ஆகவே விதிப்படி கர்மங்கள் நடத்தப்பட வேண்டும் பிராசீனமான தர்மத்தைவிடாமல் அனுசரித்தால் துர்பலம் உண்டாகாது. நோய் வராது வறுமை வராது. ஆயுளும், ஆரோக்கியமும் இலட்சுமீகரமும் சமர்த்த சௌபாக்கியங்களும

சித்த சுத்தியும், பூர்ணசாந்நியும், ஆத்மஞானமும் அனைத்தையும் அடையலாம.இகபரசுகங்களை இனிதே அடைத்து இன்புறலாம்.

''...நான் இவைகளைக்கூறுவது ஏனென்றால் இனி வருங்காலத்தில் உலகில் கலிமுற்றும் ஆசாரசீலம் குறையும் ,வேதத்யாவும் நடைபெறுவது தடைபெறும் , நாத்திகம் வளரும் , டாம்பீகம் படாடோபர் பெருகும்., பிறர் மெச்சும் வெளிவேசம் பெருகும் ! உண்மை மறந்து போலியும் அதர்மமும் தலைதூக்கும் . நீதி நேர்மை தர்மம், பக்தி ஞானம் , ஒழுக்கம், சத்யம் முதலியவற்றை புருஷர்கள் மறந்துவிடுவர் . ஸ்திரீகள் சிலதர்மங்களை கடைபிடிப்பர் ஸ்திரீ பிரஜைகள் அதிகமாவர் . ஆண்கள் குறைவர் ! வரதட்சினை தொந்திரவுகள போன்ற பற்பல துன்பங்கள் வந்து சேரும் ! ஆனால அவ்வப்போது பல மகான்கள தோன்றி தர்மத்தை நிலைநாட்டப் பெரிதும் பாடுபடுவர் , அவர்களால தான் தாமம் முற்றும் அழியாமலிருக்கும்

பொருட்செலவு அதிகமாக செய்வர் . மக்கள் வைதிகம் ஆகாரம் சந்தானம் குறையும். செலவைக் குறைக்காமல் விவாகத்தை அரைநாளில் முடித்துக்கொள்வர். அமாவாசை தர்பனம் செய்தால் இறந்துபோன பித்ருக்கள் பயனடைவர் . ஆனால் அவாகள் நரகத்தில் இருந்கால் பயன் சோரகு

அவர்கட்கு சேருவது அழுக்கு வேட்டியில உள்ள நீர் ! தலைமயிர் ஜலம் , கை கழுவும ஜலம் முதலியவைகளே ! அதனால்தான் வேட்டிபிழியவும சிரோத்ரம் பிழியவும் மந்திரங்கள் ஏற்பட்டன .

ஸ்நானம் சத்தியாவந்தனம், வேதபாராயணம் தேவபூசை , பிரம்மயக்ஞும் ஔபாசனம , வைஸ்வதேவம் முதலியவற்றை அவசியம் கடைபிடித்து காத்து வரவேண்டும் , பாரத நாட்டில் ஒழுக்கம் தர்மம், ஞானவளாச்சி ஆரோரககியம் முதலிய மேற்கூறியவைகளால் ஏற்படும்

சித்திரை மாதம் பரமேஸ்வரனுக்கு ஈசானபலி, சிரவண மாதத்த்தில் புற்றுகளில் பாபுங்களுக்கு பலி போடவேண்டும்'

மார்கழியில் ஆக்ராயணம் செய்யவேண்டும். ஒரு பிள்ளை பிறந்தபின் மயிர் நரைக்கும் முன் அக்னிஹோத்ரம் பண்ண வேண்டும். பிள்ளை பிறக்காவிடில் அக்னிஹோத்ரம் இல்லை

யக்ஞம், உபவாசம், தானம், தவம் இவைகள் சித்த சுத்தியை உண்டாக்கி மோக்ஷத்தை நல்குகின்றன. தாய் வயிற்றில் உதித்தது முதல் தேகம் அக்னிக்கு ஆகுதியாகும் வரை ஸம்ஸ்காரங்கள் உண்டு. நிஷேகமுகூர்த்தம் அக்னி சாட்சியாகவே செய்யப்படுகிறது

சகல சமஸ்காரங்கட்கும் ஆதாரம் வேதம், தர்மாத்திரங்களில் 40 சமஸ்காரமும் 8 ஆத்மகுணமும் சொல்லப்படுகிறது. சமஸ்காரம் எல்லாம் இருப்பினும் ஆத்மகுணம் இன்றேல் பயனில்லை. அனைத்தும் பரமேஸ்வரனுக்கே அர்ப்பனம் செய்யவேண்டும்.

ஒரு நாட்டு அரசன் கல்வியாளனாக, கேள்வி செல்வம் உடையவனாக அறநூல்கள் பயின்று, யானை, குதிரை தேர் படைகள் நூல்கள் பயின்றவனாக காமம், ,வெகுளி கடும்பற்று, மானம். உவகை மதம் என்ற ஆறு குற்றங்களைக்கடிந்து உண்மையறிவுடன இருக்கவேண்டும. துர்போதனை கேட்பவனாகவோ, துர்குணங்கள் உடையவனாகவோ இருப்பின் அந்நாடே அவனால் அழியும், ஆன்றோரின் சேர்க்கையும, நற்குண சேர்க்கையும் மன்னர்க்கும, நாட்டிற்க்கும அனைவருக்கும் நலம் பயக்கும். நனமந்திரிகள் சேர்க்கை இதை உண்டாக்கும். எதையும் ஆய்ந்து செய்யும் அறிவும் அறிவும, நிதான போக்கும உடையனவாக மன்னன் இருத்தல் வேண்டும்,

அமைச்சர்களை பிறப்பு , பண்பு , அறிவு , செயல்கள் , காட்சி , கருத்து ஆகமம் என்ற அளவுகோல் கொண்டு தேர்ந்தெடுத்தல் வேண்டும். அப்படி தேர்ந்தெடுத்தவர்கள் செய்யும் வினைகளை அறிந்து ஆளும் திறனும் வேண்டும். நல்ல இளைஞர்கட்கு அரசியல் நல் வாய்ப்பு தரவேண்டும். செல்வமுப செல்வாக்கும், தற்காத்தலும் தகையுடைமையும், பகையின்மையும் வேண்டும்.செங்கோன்மை கொண்டு மக்களை ஆளவேண்டும் கொடுங்கோன்மை கூடாது. 'கொடுங்கோல் மன்னன் வாழும் நாட்டைவிட கடும்புலி காணும் காடு நன்று அன்றோ.

பகை, அயல்நட்பு அறிய ஒற்றரை நியமித்து அறியும் திறன் மன்னர்க்கு வேண்டும். சோம்பலின்றி ஊக்கமுடன் அறிவுடன் செயலாற்றும் திறன் வேண்டும்,

மனதில் உறுதியும், வாக்கினில் இனிமையும் நினைவு நல்லதும் அரசனுக்கு வேண்டும். அமைச்சர்களின் ஆலோசனைப்படி நற்திட்டங்கள் தீட்டி நாட்டை வளப்படுத்த வேண்டும், காரியங்கள் ஆற்றுங்கால் தெய்வத்தால் பொருளின்மையால், மெய் வருத்தத்தால் தமக்கு துன்பம் நேரினும் மனங்கலங்காமல் செய்யும் மனத்தின்மை வேண்டும். எல்லா அவயங்களையும் தூய்மையாக வைத்திருக்கும் மன்னன், தன்னையும், சுற்றத்தார், குடிமக்களை பகைவராலும், கள்ளராலும், துஷ்டமிருகங்களினாலும் தீங்குவ்ரா வண்ணம் காத்தல் கடமை.

சத்தியத்தைக் கொண்டு அறஆட்சி நடத்தல் வேண்டும். அறிவுணர்ச்சியூட்டும் கல்வி, உலகறிவு, பண்டைய வரலாற்று கல்வி, பன்மொழிப் பயிற்சி அரசியல் கல்வி, வேளாண்கல்வி காவியம், ஓவியக்கல்வி, கைத்தொழிற்கல்வி, பல்தொழிற்கல்வி வாணிகம், பக்தி, யோகம், ஆன்மீகம், கேள்விஞானம் முதலியன மன்னற்கு இன்றியமையாதன மாசிலா மனமும் நல்லொழுக்கமும்

மனம் வாக்கு காயம் இம்மூன்றும் தூய்மையும், சீரிய அன்பும், அறமும், தன்னுயிர் போல் மன்னுயிரை மதிக்கும் தன்மை வேண்டும். சினம் தவிர்த்து சாந்தமும், பொறுமையும் வேண்டும். அழுக்காறு நீக்கி இறையன்பு சேர்த்து இருக்கவேண்டும்.

குடிகள் அடக்கம், பணிவு அகிம்சை, வீரம், வைராக்கியம், அஞ்சாமை, உறுதி, துணிவு, பொறாமையின்மை, புகழ்கொண்டு விளங்கவேண்டும். நியாயவழியில் பொருள்சேர்த்து, வீண் ஆடம்பரம் நீக்கி, அறங்கள் செய்து நற்கீர்த்தி பெறல்வேண்டு சேவை நியாயம், இரவாமை, நன்றி மறவாமை விடாமுயற்சி சோம்பலின்மை முதலியவை ஒவ்வொருவருக்கும் வேண்டும் அன்னை, தந்தை, குருவாக்கியம் கேட்டு நடத்தல், தாமம், சத்யம், அனுஷ்டானம், காமம், அடக்கம, விசாலபுத்தி, சன்மார்க்கநிலை. யோக சாதனை ஆத்ம ஞானமபேரின்பவிழைவு முதலியவை வாழ்வை செம்மைபடுத்தும் சாதனங்களாகும். இதைஒவ்வொரு குடிமகனும் பெற்றிருக்க வேண்டும்

இவ்வுலகம் பரமாத்மாவால் படைக்கப்பட்டது. உண்டு உறங்கி மக்கட்பெருக்கம் செய்யமட்டுமன்று; திரிகரணத்தாலும், பரோபகாரததாலும் சமூகத தொண்டு, தேச தொண்டு புரியவோ! அருட்பணி, இறைவனபணி, பல்லுயிர் இனபம் காண மாக கம, தான் பெற்ற இன்பம இவ்வையகத்தினரும் பெற பணி செய்தல், விருந்தினருடன் உண்ணல், பக்தியுடன் பரம்பொருளை பாடல், இத்தனை அரும் பணிகளையும் நம் குடிகளும் குறிப்பாக இளைஞா பெற்றிருத்தல் வேண்டும். அப்போது அவர்கள் பிறவி எடுத்த பயன்பெறுவர்.

பெண்களால்தான் அனைத்தும் நடைபெறுகிறது. சகல தர்மங்களும் புனிதங்களும் நடைபெறுகிறது. உலகில் சுபீட்சமும், மங்கலமும் நடைபெறுகிறது. அத்தகு பெண்கட்கு கற்பு இன்றியமையாத அணிகலன் ஆகும். அது ஒரு யோகக்கனல் திரி ஆலத்தைவிட உயர்ந்த ஆயுதம்! தீயவரை அழித்து நன்னெறியினரைக் காக்கும் ஆயுதம். கணவனையும் குழந்தைகளையும் க்ஷேமமாய்

காக்கும் வஜ்ராயுதம். கற்பரசிகளாதான் இவ்வுலகம் இயங்குகி றது. கற்பரசி களை பரமேஸ்வரனே துதிப்பார்! தேவாதி தேவர் களும் கைதொழுவார் கற்புடைய பெண்களை பிற ஆடவர்கள் ஏறிட்டும பாரார்! கற்புக்கனல் மற்றவரை நெருங்க விடாது!

கற்புடையபெண் அன்னை பவானிக்கு சமமானவள். அவளே தர்மத்தின் பிறப்பிடம்! சத்தியத்தின் நிலைகளம்! நேர்மையின் உறைவிடம்! கற்புடை மங்கையரே நாட்டையும் வீட்டையும் காக்கும் நற்படையினர்!

அந்த நற்படைக்கு, அச்சம், மடம், நாணம், பயிற்ப்பு முத லியன சேனைகள்! தூய நெறி செல்லும் வெம்புலன்களே அமைச்சர்கள் அவர்கள் மென்னடிகளில் ஒலிசெய்யும் சிலம்பு களே முரசு! தீயவைகள் யாவையும் தொலைத்து உலகில் நல் லன - தர்மத்தை - செழிக்க உதவும் வேற்படை, வாள்போல் உள்ளது. பல உயிர்களையும் கருணையுடன் காத்து நிற்பது பெண்களின் கண்களேயாகும்!

ஆகையால் பெண் கணவனை தெய்வமாக வணங்கவும் உபசா ரம் செய்து, மாமன் மாமி, நாத்தி மைத்துனர்களை அன்புடன் போஷித்து சேவைசெய்து மலர்ந்த முகம் குளிர்ந்த மொழி, கனிந்த அன்பு, மரியாதையுடைமை சிரமச்செலவு, சிக்கனம், வரவுக்குத்தக்கசெலவு, நன்னெறி, வைகறை துயில்லெழுதல் ஆடைகள் தூய்மை, தூயநீராடல், மஞ்சள் பூச்சு, புத்தாடை, குங்குமதாரணம், கோபூசை, சுதேசிப் பொருட்களைப் பயன்படு தல், கைத்தொழில் வளர்தல், புலால் நீக்கல், ஆடம்பரம் வெறுத்தல், தீயன நீக்கல், மாமியார்க்கு இதமளித்தல் எதிர் த்துப்பேசாமை, சினம் தவிர்த்தல், கணவரிடம் உண்மை, அலங் காரம் செய்யாமை, கணவருடன் கோயில்குளங்கள் செல்லல், சந்தான, விருதகி, குழந்தைகளை நன்கு வளர்த்தல், வீரபுரு ஷனாக விவேகமானவனாக, நல்லவனாக வளர்த்தல், தனக் கென்று தனிமனமின்றி பதியே தெய்வம் பதிமனமே தன் மன

மாக தம்மை தூய்மை செய்தல் சத்தியம் கடைப்பிடித்தல் தர்மம், வீரப்பெண்ணாய் திகழ்தல், ஞானதிலகமாய் திகழ்ந்து நாட்டிற்கும் வீட்டிற்கும் சேவை செய்தல் இவைகளே பெண்க ளின் குண நலன்களாம். பெண்கள்யாவரும் இப்படி என்னிடம் பக்திகொண்டு வழிபட்டு வேண்டிய யாவும் உலகிற்கு நன்மை அளிப்பார்களாக! நமக்கு தன்னலம் வேண்டாம். பொது நோக் கு வேண்டும், நான் எனது என்ற அகம்பாவம் நீங்கி நாம் நமது என்ற எண்ணமே வேண்டும். பயம் தன்மானத்தை நீக்கும். வீரன் ஒரு முறைதான் சாவான்! கோழையோ நிதம் நிதம் செத்துப்பிழைப்பான்! விருப்பு வெறுப்பின்றி எதையும் கவனிக் கவேண்டும்.

கோபம் நீக்கி, சாந்தம் கொண்டு கடமைகளைக் கைக கொண்டு தர்மத்தை மதித்து, சத்யத்தை போற்றிவாழவேண் டும் அனைத்தும் நடத்துவது அந்தப் பரமாத்மாதான்! ஒரு துரும்பும் அவன் விதிபபடிதான் அசையும், நாம்,நமது, காரியம் நமது அல்ல! அவனுடையது! இதை நீங்கள் உணர்வீர்களாக! ஆகவே இறைவனுக்கே நாம் அனைத்தும் அர்பணம் செய்ய வேண்டும். அநியாயம், அதர்மம், முதலிய நீக்கி நேர்மை, அகிம்சையை கைக்கொள்ளவேண்டும். இம்சையற்றது அகிம்சை அனைத்து தர்மங்களிலும் சிறந்தது அகிம்சா பரம தருமமே ஆகும். அதன்வழியே சீரியவழி. விரோதம், தீயொழுக்கம காமம் அச்சம், லோபம, முதலிய நீக்கி, ஐந்து பெருங்குற்றங்களை களைந்து, எவரிடமும விரோதமின்றி. அன்புடன் நட்புடன் வாழ்வேண்டும். ஐநது படைகள் செய்வதை ஒரு அன்பான வார்த்தை சாதிக்கும்.

சோமபல் அறவே நீக்கவேண்டும. ஓயாத சுறுசுறுப்பு- வேலைகள் கடமை, பணிவு இவையே எஞ்ஞான்றும. உங்கட்கு தேவை. எத்தனம, பிரயத்தனம, செய்வதனம எனமுயற்சி செய் யவேண்டும. எதர்க்கும் அஞ தரியப்பட்டு முயற்சி விடாது இருக் காமல், மேன் மேலும முயன்று வெற்றியடையவேண்டும்

நற்பணிகளை உற்சாகத்துடன் ஆற்றல் வேண்டும். மானமே பெரிது, மானம் அழியின் நமக்குஇங்கே வேறு என்ன வேண்டும்? அதன்பின் வாழ்வதில் பொருளே இல்லை. பேராசை தற்புகழ்ச்சி, வீண்ஆடம்பரம், பிறன் மனைவி மீது ஆசை இவைகள் விபரீதத்தை உண்டாக்கும். தன் மனைவிதான் தனக்கு உரியவள்! மற்றவள் தனக்கு அன்னைதான்! உலக யோகங்கட்காக மனம் சஞ்சலப்படுதல் நீக்கவேண்டும். ஆசைதான் அனைத்துக்கும், அழிவுக்கும் ஆணிவேர்! அதை நீக்கவேண்டும். மனம் தூய்மை பெறல் வேண்டும். பரம்பொருளின் நினைப்புடன் காரியங்களை செய்து மற்றவர் துயர் துடைத்து உலகப்பற்று நீங்கி. புலனடக்கத்துடன் ஆன்மசுத்தியுடன் தூய வாழ்வு நடத்தி இந்திரிய நிக்ரகத்தை கைக்கொண்டு வாழவேண்டும்.

மனம்—அது ஒரு வண்டு காடுவனாந்திரம்—எங்கும் தாவும்! அதை அடக்கி வாழ்வை அருள்வழியிலே செலுத்தவேண்டும். சித்திகளை விரும்பி கிரியை செய்யக்கூடாது. பேரின்பமாகிய மோட்சத்தைப் பெறவே நமது அனைத்து கிரியைகளும் இருக்கவேண்டும். பொது நலமே நன்னலம், மண்ணுயிரே நம் உயிர் என்ற இலட்சியத்துடன்—வாழ்வு நடத்தவேண்டும்.

அவ்வுலகம் செல்ல அருளையும் சேர்த்துவைக்க வேண்டும், பிறர் மெச்ச வாழாது, சித்தசுத்தியுடன் மனத்தூய்மையுடன் அகங்காரம் நீக்கி வாழவேண்டும்.

இதை நான் வலியுறுத்தக் காரணம் சில நூற்றாண்டில் உலகில் அக்ரமம்பெருகி வர்ணாஸ்ரம தர்மம் குலைந்து அதர்மம் தலைதூக்கும!வேதானுஷ்டம் தொலைந்து பலவிபரீதங்கள் தோன்றும்! ஆனால் சிலர் இவைகள் காத்து நிற்பார்! அவர்கள் வாழ்வார்! ஆதை மறப்பவரோ இஞ்ஞான தீயில் அழிவார்.

நீதியைக் காக்க பல மகான்கள் தோன்றுவர் ! அவர்கள் மூலம் பக்தியும் , அன்பும் , மதமும் , துயநெறியும் செழிக்கும் பாமரர் இத்தகு மகான்களை ஆதரியாவிடினும் ஒரு சிலரது இவை உணர்ந்து மதிப்பர்.

வைசியர்கள் வைசியத்வம் நீங்காது இருக்கவேண்டும். வைசியராகிய உங்களிடமே செல்வங்கள், பசுக்கள், தான்யங்கள், ராசிகள் யாவும் உள்ளன. நவதான்யங்கள் அஷ்ட ஐஸ்வரியங்கள் யாவும் உள்ளன. ஆசாரம். தெய்வ பக்தி, . பரோபகாரசிந்தை , ஞானம் உள்ளது. உலகிற்கு உபகாரங்கள், தர்மங்கள் செய்யவேண்டியது நீங்கள் தான் ! ஸ்வகையிலும் உலகிற்கு உபசாரம் செய்யலாம் ,

வைசியர்கள் நலமாக வாழ வேண்டும். அவர்கட்கு நல்ல மழையும் விளைவுகளும் : தான்ய சம்பத்துகளும் பெருக தேவர்கள் அனுக்ரகிக்க வேண்டும் ! தர்மமும் க்ஷேமமும் மற்றவர்க்கு உங்களால்தான் கிடைக்க வேண்டும்! அந்தனர் வேள்விகள் உலக நன்மைக்காக செய்கிறார்கள் லோபஉபசாரம் செய்யவே நீங்கள் பிறந்துள்ளீர்கள் இக்குலத்திற்கு நற்பயன் உண்டாக்கவே நாம் அவதரித்துள்ளோம்!.

ஆகவே நீங்களும் உம் குலகோத்திரத்தாரும், என் துணையால் உலகிற்கு நன்மை தேடிக் கொள்ளுங்கள் . உணவு , உடை, கல்வி , கலைகள் , ஆயுள், ஆரோக்யம், அனுபவம் , பக்தி , யோகம் , ஞானம், இதை அனைவரும் சிரமமின்றி அடைய முயல்வீர்களாக! நீங்கள் எப்போது என்ன நினைப்பினும் நான் உமக்கு உறு துணையாக இருந்து எல்லாவித நன்மைகளையும் செய்கிறேன் மாசற்ற உம் மனத்தில் நான் என்றும் குடியிருப்பேன் .

தூய இதயம் கொண்டவனே ஞானி! பக்தியின்றி ஞானமில்லை! என்னருளால்தான் பக்தியும் ஞானமும் உண்டாகும். நானின்றி இவ்வுலகில்லை. உலகம் என்னில் தோன்றியது! என்னருளாள் இயங்குவது! உலகம் ஒரு ரதம்! நான் அதன் சாரதி ! உலகம் தீபம் நான் ஒளி!

உலகம் மணி. நான் ஓசை ! என்னையன்றி உலகம் இல்லை நானே உயிர், நானே ஆன்மா! நானே நாமகள் ! நானே கருணை, நானே பார்வதி! சங்கரி! பிரம்மீ! நானே இச்சை கிரியை ஞானம் இம்மூன்றும் ! பஞ்ச சக்திகளும், சப்த மாதர் களும், நானே, நானே சக்தி நானே சிவம்! சிவம் சக்தி ஒன்றே வேறல்ல என்னை உணர்பவனே ஞானி! அவன் வேறு எதையும் நோக்கான்! என் திவ்ய தரிசனம் பெற்றோன் எனது சேவையை பெறும் ஆனந்தத்தையே விரும்புவான். அகங்காரம் உடையோன் என்னை அடைய முடியாது!

அனைத்தும் என்னிடம் ஒப்புவித்து என் திருவுளப்படி கருவி யாக இருந்து வாழ்பவன் என் அருளுக்கு பாத்திரமாகி பேரின்பம் அடைகிறான். உண்மை அன்பர் எது விரும்பினாலும் நான் என்றும் அடிமை ! உண்மை அன்பர்களை எக்காலமும் ரக்ஷித்து காப்பேன். ஓங்காரமே என் ஸ்வாசம், வார்த்தை தான் கற்ற கலையை எனக்காக என்னை துதிக்க திருப்திசெய்ய எவர் உப யோகப்படுத்த நினைக்கின்றனரோ பக்தியுடன் அர்ப்பணம்செய் கின்றனரோ நான் அவர்க்கு உறுதுணையாக இருந்தே காத்து அருள்கிறேன்.

அனைத்து லோகங்களிலும் நான் நீக்கமற நிறைந்துள்ளேன் ஒவ்வொரு அணுவிலும் அமைந்துள்ளேன். என்னை வழிபடுங் கள். அனைத்து இன்பமும் எய்த நான் அருள் புரிகிறேன். எந்த கலையும் என்னை வழிபடவே ஏற்பட்டது. அக்கலைகள் எனக் காக அர்ப்பணம் செய்யாவிடில் பயனற்றதே! பற்பல அவதார புருஷர்கள் தோன்றி உங்களை கடைத்தேற்றியுள்ளார்!அதுவும் என் பேரானந்தத்தின் துளிகளே !

இந்த அவதாரங்களால் தான் என்னை தரிசித்து அருளைப் பெறுவார்கள்! ஆதலால் உம் குலத்தாருக்கு எவ்வித குறையும் வராது.

என் உபதேசங்களைநீவீர் கைக்கொண்டு, செயல் முறையில் நடத்தி பரிபூரணமாக எனது திருவருளை நம்பி வாழ்ந்து ஒப் பற்ற சுகத்தினை அடைய வாழ்த்துகிறேன்! என்று அன்னை வாசவி கூறி முடித்தார்.

# அத்தியாயம் பதின்மூன்று

உலகில் தீமைகள் பெருகி அஞ்ஞானம் வளர்ந்து தர்மம் தலை குனியும் போது அகிலாண்ட நாயகியான ஆதிப்ராசக்தி உலகில் ஜனித்து தருமத்தைக் காக்கிறாள். சில சமயம் தீயோரை திருத்த வும் முயல்கிறாள். அப்படி விஷ்ணுவர்தன மன்னனை அவன் வினைகளை நீக்கி அவனுக்கும் நித்திய ஜீவஜன மோட்சத்தை அளிக்க அன்னை விரும்புகிறாள், எனவே ஒருமாய நாடகத்தை நடத்துகிறாள் விஷ்ணுவர்த்தன தூதுவர்கள் வந்ததை அறிந்த அன்னை ஒரு மாய அரச சபையை உண்டாக்கினாள். அதில் குசும சிரேட்டியும் ஏனைய எல்லா வைசியர்களும் சபையில் இருப்பது போல் மாயத் தோற்றத்தை சிருஷ்டித்தாள் அன்னை ஜகத்ஜனனீ! அன்னையின் லீலைகளை யார் வரையறுக்க இயலும்.?

அந்த தூதுவர்கள் மாய சபையில் நுழைந்தனர், குசுமசிரேட்டி யிடம் தம் மகளை விஷ்ணுவர்தன் மன்னருக்கு திருமணம் செய் வதால் ஏற்படும் அபரிதமான நன்மைகளை எடுத்தியம்ப, குசும சிரேட்டியும், தம் பெண்ணை மணம் முடித்துத் தருவதாக வாக்க ளித்தார். மாயையின் இருளில் உள்ள இவ்வுலகம் மாயையில் தானே இயங்குகிறது வந்த தூதுவரும் குசுமசிரேட்டியார் தம் மன்னர்க்கு பணிந்துவிட்டார் என்று மகிழ்ந்து இருக்க பின் குசும சிரேட்டியார் உம் ஆஸ்தான சோதிடர்களை கொண்டு நல்ல முகூர்த்த நாளை தேர்ந்தெடுத்து எமக்கு சொல்லி அனுப்புங்கள் அதுமட்டுமின்றி திருமணத்திற்கு முன்பு நாங்கள் ஒரு விசேட அக்னி பூசை நடத்தவேண்டும்.

ஆகவே நீங்கள் சென்று நிச்சயம் செய்த நாளை சொல்லி அனுப்புமின்'' என்று தூதுவர்களை அனுப்பினார் குசும சிரேட்டி!

விஷ்ணுவர்தனரின் தூதுவர் தங்கள் நாடு திரும்பி தாம் கண்ட மாயத்தோற்ற அவையை நிசம் என நம்பி குசும சிரேட்டியரின் சம்மதம் பற்றியும் நன்னாளை குறிக்கும் விஷயமும் எடுத்தியம்ப மன்னரின் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை - சாஸ்திரிகளிடம் ஒரு சுபமுகூர்த்த நாளை குறித்து அதை உடன் பெனுகொண்டாபுரி அனுப்பியும் வைத்தான்! மாசி மாதம் சுக்லபட்சம் திருதியை, சுக்ரவாரம் ரேவதி நட்சத்திரம் அமிர்தயோகம் கூடிய சுபதினம் காலை ஏழரை நாழிகைக்கும் மேல் மீன லக்கினத்தில் திருக் கல்யாணம் செய்ய மிக்க உசிதமாக உள்ளது என்று சொல்லி அனுப்பினார்,

திருமுகத்தைக் கண்ட குசுமசிரேட்டி இத்திருமணத்தில் மிக்க மகிழ்ச்சி ஏற்பட்டதாயும் ராச மகேந்திரபுர தூதுவருக்கு பரிசு கொடுத்து அனுப்பியதாகவும் அனைவருக்கும் புலப்பட்டது. அது மட்டுமின்றி இந்த சுபயோக சுபதினத்தில் ராஜாதி ராஜனாகிய ஸ்ரீ விஷ்ணுவர்த்தன பூபதிக்கும் நமது குசும சிரேட்டியின் புதல்யான வாசவாம்பிகைக்கும் திருமணம் நடப்பதாக நிச்சயித்து இருப்பதாயும் அதற்கு முன்தினம் அதாவது குருவாரம் துவிதியை உத்திரட்டாதி நட்சத்திரம் சித்தயோகம் கூடிய சுபதினத்தில் அதைச் சேர்ந்து அக்னி பூஜை நடத்த வேண்டியதாலும் நம் நகரம் முழுதும் அலங்காரம் செய்தல் வேண்டும் என்று அனைவரும் அறியும் வண்ணம் பெனுகொண்டாபுரியின்கண் பறை சாற்றப்பட்டது.

இராச மகேந்திரபுரியில் மன்னன் விஷ்ணுவர்தனன் வாசவியின் நினைவாகவே இருந்தான். அவன் நடக்கும் போதும்,

உட்கார்ந்த போதும், நிற்கும் போதும் தன் அருகே அவளும் இருப்பதாகவே எண்ணி அவளுடன் பேசுவதாக தனக்குத்தானே ஏதேதோ உளறிக்கொண்டு இருந்தான்! பின் திடீரென தன் அந்தணரை அழைத்து ' நீங்கள் சென்று பெனுகொண்டாபுரி அடைந்து குசும சிரேட்டியிடம் இன்னும் திருமணத்திற்கு ஏதா வது தேவையா என்று எம்மன்னர் அனுப்பினார் எனக்கூறி தேவையானதை தெரிந்து சடுதியில் திரும்புங்கள் என்று அனுப்ப அவர்களும் பெனுகொண்டாபுரியில் மாயத்தோற்றமான குசும சிரேட்டியின் அவையை அடைந்து தம்மன்னனின் சேதியை சொல்ல அவர் "தூதர்களே! எங்கட்கு இப்போது எதுவும் தேவை இல்லை இறைவன் அருளால் எல்லாமே இங் குள்ளது திருமண ஏற்பாடுகளும் ஜரூராக நடந்துக்கொண் டுள்ளது. அப்படி ஏதாவது தேவைப்படின் சொல்லி அனுப்புகி றோம். தாங்கள் சென்று வருக! என்று அனுப்பினான். அவர்கள் வரும் வழியில் வீதியில் அந்நகரின் அலங்கார காட்சிகளைக் கண்டு பிரமித்தனர். முத்துத்தோரணம், மாவிலைகள், வாழை மரங்கள் மகரதோரணம் முதலியன கட்டி பலவித காய்களையும் கட்டி தொங்கவிட்டு பூக்களால் அழகு செய்யப்பட்டு ஒவ்வொரு வீட்டு முன்பும் அரிசி மாவால் பெரிய பெரிய கோலங்கள் இடப் பட்டு இருந்தன! அந்த மாவை தின்ன வரிசையாக எரும்புகள் ஊர்ந்துவர அது அந்த கோலத்திற்கு அணி செய்யும் கருப்புக் கோலமாக தெரிந்தது. முத்து, பவளம், வைரம் வை டூரியத்தால் மாலைகள் அமைக்கப்பட்டு ஆங்காங்கே கட்டி தொங்கவிடப்பட் டிருந்தன. அதற்கு பட்டும், பீதாம்பரமும், திலாம்பரமும், உள்ள துணிகள் மூலம் அணி செய்யப்பட்டிருந்தன. இதற்காக எண்ணற்ற திரவியம் செலவழித்து தச்சர், கொத்தர், தையற்கா ரர் ஆகியோர் மூலம் நகரை சிங்காரமாக அழகு செய்தனர். அம்மக்கள்! அது மட்டுமின்றி ஒவ்வொரு தெருவிலும் நாட்டியம் பாட்டு, இசை இறைவனின் பிரசங்கங்கள் முதலியவை இரவும் பகலும். நடத்தப்பட்டு சொர்க்கபுரமாக திகழ்ந்தது பெனு-கொண்டாபுரி நகரம்.

இதையெல்லாம் கண்டு மகிழ்ந்த புரோகிதர்கள் தங்கள் நாட்டை யடைந்து தம்மன்னரிடம் மகிழ்ச்சியாக இக்காட்சிகளை எடுத்து உரைத்தனர்!

இன்னும் இதைக் கேட்டு பித்தம் தலைக்கேற 56 தேசத்து மன்னருக்கும் தம திருமண அழைப்புகளை அனுப்பி அவர்கள் நேரோராசமகேந்திரபுரம் வந்து பிறகு அனைவரும் சேர்ந்துபெனு கொண்டாபுரி செல்லலாம் என்றும் குறித்து இருந்தான்.

வாசவி என்ற அழகோவியத்தை எண்ணி, எண்ணி உணவை வெறுத்து, படுக்கை நொந்து, பாலும் கசந்து அவள் தன் அருகே இருப்பதாக எண்ணி தனக்குத் தானே பேசியும்உளறியும் பரிதாபமாக இருந்தான் மன்னன்! இப்படி இருந்த மன்னன் தன் மண நாள் நெருங்கிவிட்டது நாளையே நம் படைகளுடனும் சகல ஐஸ்வரியங்களுடனும் திருமணவிழாவிற்கு செல்ல ஆயத்த மாக தம் அமைச்சர் பிரதானிகட்கு கட்டளையிட்டு பின் அதற்-குள் திருமணத்திற்கு 56 தேசத்து மன்னரும் வர அவர்களை தக்கபடி கௌரவித்து தன் அரண்மனையில் தங்கவைத்தான். பின் இரவு உணவுக்கு சென்றான்.

ஆனால் உணவு சுவையில்லாமல் கசந்து வழிந்தது மலத் தைப்போல துர்கந்தம் வீசியது ! பின் அவன் ராணி பருக பால் தந்தாள். அது ரத்தமாக மாறியதைக் கண்டு அதை கீழே வீசி விட்டு தன் ராணியையும் கோபித்துக் கொண்டான் ! பின் படுக் கைக்கு சென்றான்.

நல்லிரவு ! அவன் முன்னே ஒரு பயங்கர உருவம் வந்தது இரண்டு புஜங்களும், யானைத் தந்தம் போன்ற கோரை பற்க களும் சிங்கத்தின் மேல் அமந்து தீக்கண்களுடன் கோபச் சிரிப் புடனும் தீ அனல் வீசும் மூச்சோடும் கையில் பளபளக்கும் சூலா யுதத்துடனும் அவ்வுருவம் நின்றது!

அவன் பெரும்பீதியடைந்து நடுங்க அவ்வுருவம் தன் சூலாயுதத்தால் உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால் வரை இரண்டாக அவனைப் பிளந்து தூக்கியது! அதுபோல கனவுகண்ட மன்னன் பேய் கூச்சலிட்டு சப்ரமஞ்சத்திலிருந்து கீழே விழுந்தான் அவனது ராணிகளும், தோழிகளும் அவனை ஆஸ்வாசப்படுத்தி பின் தூங்கவைத்தனர்!

அவனது துர்க்கனவு கேட்டு அமைச்சர் அது திருமணத்திற்கு முன் காளி பூசை செய்யப்படவேண்டும். அதுதான் அன்னை இப்படி தெரிவித்தாள் என்று சொல்ல, ஊர்கள் தோறும் தம்பட் பட்டம் அடித்து காளி பூசை நடத்த உத்திரவிட்டான் விஷ்ணு வர்தனன். பூசையும் நடந்தது! பின் அமைச்சர் சேனாதிபதி சகிதம் தனது குதிரையில் மாப்பிள்ளை கோலத்தில் ஏறினான்! அப்போது பல தீய சகுனம் தோன்றியது! அவனது இடக்கண் இடத்தோள் துடித்தது. அவனது ராணிகட்கு பொல்லாத் துர் சகுனம் தோன்றியது! திடீரென அவனது குதிரை குப்புற வீழ்ந்து இறந்தது! மன்னனும் அதன்மேல் விழுந்தான்!

பின் எவர் சொல்லியும் கேளாமல் வேறு குதிரையில் ஏறி தீய சகுனங்களை சட்டை செய்யாமல், வாசவி மீது கொண்ட காதலால் அறிவிழந்து பெனுகொண்டாபுரி சென்றான்!

# அத்தியாயம் பதினான்கு

தேவாதி தேவரும் மூவரும் வணங்கும் ஜகத்ஜனனியாக வாசவி தேவாலயத்தின் கண திருவாய் மலர்ந்திட்டமொழிகளை கேட்ட வைசியர்கள் தாம் பிறவிப்பயனைப் பெற்றுவிட்டோம் என மகிழ்ந்து உணவு மறந்து நாட்கள் போவது தெரியாது காலை மாலை அறியாமல் அங்கே இருந்து அன்னை உபதேச மொழி களைக் கேட்டனர். அன்னையின் அஞ்ஞைபடி தத்தம் இல்லம் சென்றனர். குசும சிரேட்டியும், குசுமாம்பிகையும் அரண்மனை சேர்ந்தனர்.

மறுநாள் காலைக்கடன் முடித்து வைசியர்கள் 105 கோத்திரத் தாரும் பட்டு பீதாம்பர உடைகளுடன் கண்கொள்ளா வைர வைடூரிய அணிகலன்களுடன் குசுமசிரேட்டியின் அரணமனைக்கு சென்று அவரையும், குசுமாம்பிகையும சாவாதிகார பூசணாதி களுடன் அன்புடன் தேவாலயத்திறகு அழைத்துவந்தனா. வாச வாம்பிகைக்கு மங்கலஸ்நானம் செய்து, களப கஸதூரிகள் பூசி பட்டு பீதாம்பரத்தால் அலங்கரித்து ஸ்வர்ண ரத்னாபரணங்க ளால்அணி செய்து பக்தி விநயத்துடன் அழைத்து வந்தனர்.

இந்த அனனையே கலைமகள் அம்சம் : ஆகவே கல்விச் செல்வம் வேண்டுவோர் இங்கே வருமின்! இந்த தாயேதிருமகள் அம்சம், ஆகவே செலவம் வேணடுவோர் இங்கே வருமின், மோட்சம். பிறவி யாவும் நல்கும் இவளே நமது தெய்வம். எத்த கைய விழுமிய இன்பங்கள் வேண்டியோர் விரைந்து வந்து இந்த தெய்வத்திடம் பெற்றுக் கொள்ளுமின் வருக! என்று

உலகினரை வருந்தியழைப்பது போல் அன்னையின் பாதங்க ளில் அணிந்த பரிபுரங்கள் ஒலிசெய்ய நம் அன்னை அன்னம் போல் அழகுற நடந்து வந்தாள்!

வாத்யங்கள் முழங்க, கொடிகளும், குடைகளும், மகர தோரணங்களும் மங்கள கோஷங்களும், வேத கோஷங்களும் முழங்க சகல சாஸ்திர விற்பன்னர் புடை சூழ நம் அன்னையும் வைசியர்களும், அமைச்சர் பிரதானிகளும் புடைசூழ பெனு கொண்டாபுரியை வலம் வரத் தொடங்கினர். நகர் முழுதும் பேரெழிலுடன் அலங்காரம் செய்யப்பட்டிருந்தது பொற்பாவை களும், முகவிளக்குகளும், மகர தோரணங்களும்,கண்ணாடிகளும் வெண்சாமரங்களும், பூஞ்சுட்டுக்களும் மங்கலமாக வைக்கப்பட்டு மாவிலை, மலர்மாலை, கமுகு, வாழைமரம் முதலியவைகளால் ஒவ்வொரு வீடும் அழகுற அலங்கரிக்கப்பட்டிருந்தன. ஆரத்தி நீராஞ்சனம், தாங்கிய மங்கையர் மங்கள கீதங்கள் பாடும சுமங்கிலியரும் முன்செல்ல நமது அன்னையும் ஏனை யோரும் பண் இசைக்க, யாழ், வீணை ஒலிக்க, நடனமாதர் நடனமாட, அனைவரும் தேவாலயத்தை அடைந்தனர். அப்போ து அங்கிருந்த வைசியப் பெருமக்கட்கு நமது அன்னையின் அருளால் ஒரு விநோதமான உணர்ச்சி உண்டாகி, நினைவுகள் மறந்து அருட்பசி அதிகரிக்க ஆண், பெண் இருசாரரும் என்றும் கிட்டாத மோட்சத்தை அருளவாய் பராசக்தி என்று ஸ்ரீ நாராய ணியை நினைத்து பிரார்த்தனை செய்தனர்.

பிறகு அன்னை வாசவி வைசியர்களை அழைத்து அவர்க ளுக்கு ஆன்ம உபதேசம் செய்தார். இவர்கட்கு ஆன்ம ஞானம் உண்டாவதாக! என்று அவர்களை ஆசீர்வதித்தார். பின் உங்கள் பிறவித் துன்பம் நீங்கவும் எல்லையற்றபேரின்பம் அடை யவும் ஒரு வழியை செப்புவேன் அதை அனுஷ்டிப்பரேல்

உபாவமனைத்தும்ம் தொலையும்' என்று கூற வைசியர்களும் மனங்குளிர்ந்து ஆனந்தபாஷ்பம் பெருக அம்பிகையின் பாதங் களைத் தொழுது '' சொன்னபடி நடக்க எங்கட்கு திறமையில் லாவிடினும், நீங்கள் உங்கள் அருட்பலத்தால் அத்திறமையை எங்கட்கு காட்டி எங்களை கடைத்தேற்ற அருள்புரிவாய் வாசவி தேவி! என்று வேண்டினர். உடனே அன்னை இந்த வைசியோத் தமர்கள் ஜீவனைப் பார்த்து ஆத்மஞான உபதேசம் செய்வித்தார் பாவங்கள் செய்வதும் பிறகு மறுபடியும் பிறவிகள் பிறப்பதும். நான் எனது என்ற அகங்காரமே காரணம்-நான் என்பது இல்லை. அனைத்தும் அந்த பரமாத்மாவேதான்! அவனின்றி ஒரு அணுவும் அசையாது! ஒருவிரல் கூட உன்னால் அசைக்க முடியாது! அதுவும் அவன்தான் அசைக்க உத்திரவிடுகிறான் பாவங்கள், கிரியைகள், புன்னியம், க்ஷேமம் யாவும் அவன் உங்கட்கு எழுதிய விதி! அந்தப் பரப்பிருமத்தை மனம், வாக்கு காயம் மூன்றும் சுத்தமாக பூசிக்க வேண்டும். நடிப்பை அவன் ஏற்பதில்லை, இதய பூர்வ பக்தியே தேவை!

தருமம், சத்தியம், நீதி முதலியன நீ அந்த பரமாத்மாவை காணச் செல்லும் வழிகள். பற்றை நீக்கி, இகபர சுகம் நீக்கி, நான், எனது, என்ற கர்வம் நீக்கி அனைத்தும் அந்த பகவான் தான் என உணர்வீர்களாக!

இதை பிரும்மாத்ம ஐக்ய அகண்ட நானத்தை உணர்த்து பவர்கள் தான் ஞானிகள். ஆதலின் ஒவ்வொருவரும் நான்எனது என்பதை விட்டெறிந்து 'சர்வம் சக்திமயம்' என்று உணரவேண் டும். சத்யஞான பரிபூர்ண பிரம்மமே நான் என தெளிவான புத் தியால் தன்னை அறிதல் வேண்டும். மண்ணில் உதித்த சகலமும் மண்தான். அதுபோல் சத்ருப பிரமத்திலுண்டாகிய இவ்வுலகம் அனைத்தும் பிரம்மமே ;

கனவிலே இருக்கும்போது அந்நியமாய் தோன்றும் நமக்கு விழிப்புனர்ச்சி வந்ததும் நம்மை உணர்கிறோம். அதுபோல இவ்வுலக வாழ்வு கனவு - மாயை ! பிறவி என்பது தான்

உண்மையான விழிப்புணர்ச்சி! அப்போது நாம் இறைவனை அடையலாம் இனி இந்த மாயப்பிறவிகள் வேண்டாம்! நீ அது ஆகிறாய்! என்ற அகண்ட ஞான உபதேசம் நமக்குக் கிடைக்கும் இவ்வார்த்தை பக்தியோடு, இதயத்தால் எப்போதும் சிந்தை செய்யவேண்டும். அப்போது ஆத்மா ஆனந்த நிலை யெய்தும் தன்னை அடைந்தவர் பிரகாசத்தை தன் கண்பட்ட மாத்திரம் கருணையுடன் தூண்டுபவன் தான் மகாயோகி! தன் தவமகிமையால் சாந்தமளித்து ஆத்மஞானம் தூண்டுபவன் மக்களிடையே அமுதக்கடல் போலப் புகழ்டைவான். அவன் எதுவும் செய்யாவிடினும், எண்ணம் நிறைவேறும். அவன் உண்மை எங்கும் பரவும். அவன் யாதொன்றை எண்ணாவிடினும் அது யாவும் நடக்கும் அத்தகைய உத்தம மகான்களால் தான்எல்லா உலகங்களும் நன்மையடைகின்றன.

உத்தம ஞானிகள் கண்பட்டாலே துன்பம் மாயமாய் மறையும். துன்பம் என்பது அவரவர் இடம் இருக்கும் மனப்பிரமையே யாகும். ஒவ்வொருவருக்கும் உள்ளத்தின் உள்ளே உள்ள பரமாத்மாவை கண்டால் அந்த பிராந்தி அடியோடு நீங்கும். அப்பரமபத ஒலியை முதலில் காண வேண்டும். பரமந்திர ஸ்தானத்தில் காணவேண்டும். கடவுளின் ரகசியத்தை அறியல்வெறும் சரீரத்தை அலங்கரித்தல் அவர்கள் கடைத்தேற வழியே இல்லை. உலக சுகத்தை வளர்த்து - சுஷ்சமமய் நித்ய ஆனந்தத்தை அனுபவக்க முயலவேண்டும். சாதாரண தூக்கம் விட்டு சூட்சும நித்ரை செய்து ஆனந்த நித்திரை செய்யவேண்டும். மனதின் பிரமையை சுட்டுத்தெரிக்கவேண்டும்,

நீங்கள் இளவயதில் உபநயனம் செய்துக்கொண்டு முப்புரி நூல் தவறாமல் அணிந்துக்கெகள்ளுங்கள். உபநயனம் என்பது ஞானக்கண்கள் அந்த மூன்றாம் கண்ணினால் அந்நியபாவனைகளின்றி சமபாவனையாக கொள்ளவேண்டும். உபநயனத்தின்

முக்கிய லட்சியம் எல்லா இடங்களிலும் அனைத்தும், இரவும் பகலும் பரப்பிருமஸ்பருமாக காணவேண்டியது தான்! இந்த இலட்சியத்தைதவறாமல் அனைவரும் செய்யவேண்டும். நீங்கள் ஏன் பூணூல் தரிக்கிறீர்கள்! இந்த தேகம் நானல்ல! மனமவாக்கு காலம் நானல்ல. ஸ்தூல சுழம் தேகங்களும் நானல்ல! [திரிபுடி சம்பந்தமான இவ்வுலகப் பற்று எனக்கில்லை. காமம், வெகுளி மயக்கம் என்னை தீண்டாது ஆகாமியம் சஞ்சிதம் பிராப்தம் என்னும் மூன்று வினைகளும் என்னைவிட்டு விலகிவிட்டன. என்னை எதுவும் தீண்டாது. உலகத்துடன் அதன் தொடர்புடன் எனக்கு சம்பந்தமில்லை உலகில் நான் இருந்தாலும் தாமரையில் தண்ணீர் தண்ணீர்போல சம்மந்தமின்றியே இருப்பேன் என்பதை 'தெரிவிப்பதற்காகத்தானே முப்புரிநூல் கொண்ட பூணூல் தரித்துக் கொண்டிருக்கிறீர்கள் ஆகவே இவைகளை தீமைகளை பந்தத்தை பாசத்தை நீக்கி எங்கும் நானே நானே பிரும்மம்! என்ற ஏகாந்த பேரொளியின் திருக்காட்சியை கண்டு அதோடு கலந்து மூழ்கி அதன் மயமாகி ஆனந்த மெய்தல் யேண்டும்.

1 உலக ஆசைகள. செல்வத்தை. சந்தானங்களை வேருடன் களையவேண்டும். இதற்கு திடமான தைர்யம் வேண்டும். [மகா ஞானிகள் கூட அஞ்ஞான சந்தேகங்கட்கு இரையாகி விடுவார் ஏனென்றால் பந்தம், பாசத்தில் பூர்விகம் உழன்றதால் அதை நீக்கல் மிகவும் சிரமம்தான் மனக்கட்டுப்பாட்டுடன் நீக்கவேண்டும். இதயத்தில் நிராசை நிலைநாட்டவேண்டும். நான், நீ என்ற பேதம் களைய வேண்டும்.

அழியும் உலகை சாஸ்வதம் என்றும் மாமிசதேகம், 'தான் லட்சியம் என்றும் அதில் 'உள்ள மோகமே இன்பம் என்பது விபரீதம் ஆகவே அதை ஞானம், தவம், மோனம் என்ற

ஆயுதத்தால் நீக்கி மனம் நிச்ராந்தயாக மாறவேண்டும்! என் மதம் உயர்ந்தது, மத தாழ்ந்ததும்! என்று சண்டையிட வேண் டாம் ஆதிமத• ஒன்றுதான் அது அன்புமதம் அதுதான் நிலை யான உண்மையான மதம் ,ந்த மதத்தைப் பின்பற்றினால் உலகில் வர்க இனபேதங்கள் மறையும், சந்தோஷமும், திருப்தி யும் பரஸ்பரம் ஏற்பட்டு பூலோக சுவர்கம் ஏற்படும். அதனால் சமரசம், சகோதரத்வம், ஏகத்வம், நிலவும்.

அழியு உடலை சாசுவதமாக நினைக்காதீர்கள் ! நிழலைப் பார்த்து மருளவே வேண்டாம். உங்கள் கண்கட்கு பழுது பாம் பாக தெரியும், அது தான் மாயை உங்கள் உடலில் உறைந்து ஆட்டி வைக்கிறது. அது பாசம் பற்றையும் லௌகீகத்தை யும் தோற்றுவிக்கும் லௌகீதம் திரவியங்களை ஆபரனங்களை சேர்க்கச்சொல்லும் இதனால் இந்த உடல் பற்று. பாசம், சொத்து சுகத்தை விரும்பும் ! ஆனால் ஆத்மாவை, பரம்பொரு ளை எப்படி அடைவீர்கள்.

நான் - எனது ஏன்பதை விட்டுவிடுங்கள் ! நான்யார்! இந்த அழியும் தேகமா ! இல்லை. ஞானேந்திரியங்கள்! இல்லை மனமா! அல்ல! சர்வ தொழில்களும் இன்றி விஷயங்கள் மட்டும நிறைந்த அஞ்ஞானமா? இவை ஏதும் நானல்ல, நான் என்பது அறிவு! அறிவின் உருவம் சச்சுதானந்தம்! பரம்பொருள்

இந்த சச்சுதானந்தத்தை தடுப்பது நம் நினைவுகள்—அது மனத்தால் உண்டாகிறது. ஆகவே முதலில் மனத்தை அடக்க வேண்டும். அப்போது நினைவுகளும் அடங்கும் இவ்வுடலில் நான் என்ற நினைவு தோன்றும். அதுவே முதல் நினைவு! அது இதயத்தில் தோன்றும். அது மனம். என்று கூறப்படும். இந்த

மனத்தை அழிக்க நான்யார் என்ற விசாரத்தால் தான் முடியும்!

நான்யார் என்ற நினைப்பு மற்ற நினைவுகளை அழித்து தானும் அழியும்! மற்ற எண்ணங்கள் எழும்போது அது யாருக்கு உண்டானது என்று அறிந்தால் மனம் தன் இடத்திற்கு திரும்பவும், இப்படி மனம் இதயத்தில் தங்கினால் 'நான், போய் 'தான், நினைவு மாத்திரம் விளங்கும்! நான் இல்லாத இடம் 'ஞானதிருஷ்டி என்பர். இது மனத்தை ஆத்மமார்கத்தில் லயிக்கச் செய்வதே அன்றியும், பிறர் கருத்தறிதல்! மூன்று காலம் உணர்தல் தூரதேசத்தில் நடப்பது என்பது ஞான திருஷ்டியல்ல இவை மனத்தின் கற்பனைகள். ஈஸ்வர நாமமே எல்லாம், ஜகம் எல்லாம் அவன் ரூபமே!

''ஓம்!,, என்பது ஓங்காரம். அதுவே பிரணவ மந்திரம்—சமுத்திரங்களும், மலைகளும் 'ஓம், என்றே பிரார்த்திக்கிறது! அந்த ஓங்காரமே சகல பாபங்களையும் அழிக்கும் ஞானாக்னி அதை நீங்கள் எவ்வித வேலைசெய்யும் எனவும் பிரார்த்தியுங்கள்! சகலமும் ஜெயம் தரும் ஓம் என்றதுமே சிவாலையம்—அதுவே நமக்கு புண்ணியத்தை தரும் தாரகமந்திரம்!

வேதந்தின் ரசத்தை பிழிந்து கட்டியதுதான் காயத்ரீ! அது பாரதநாட்டு பிரும்மரிஷிகள் அனைவருக்கும் விஜம, தீர்ம, ஆயுள், ஆரோகியம்,ஆன்ம பிரகாசம் அலிக்கும் அற்புதமருந்து அம்மகாமந்திரம் 24 எழுத்துங்களில் திகழ்கிறது. அது உலக ஜீவ நிலைகளை ஒழித்து சிலநிலை உணரவைக்கும். பூமி ஆகாயம், சுவர்கம் முதலிய எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்திருப்பது ஓம் என்னும் சச்சுதானப் பொருள்! அது சகல லோகங்களையும் ரஷிக்கும் ஜகன்மதா! நம் இந்திரியங்களை அடக்கும் ஆன்ம சக்தி அதை சிந்தித்தால் உண்மை ஒளி காணலாம்!

எங்கும் நீக்கமற நிறைந்துள்ள 'சிவோஹம்' என்ற மந்திரத்தை யாசித்து அந்த நித்தியானந்த பரிபூரணத்தால் ஆனந்தமாக வாழ்வீராக!'' என்று நம் அன்னை வாசவி திருவாய் மலர்ந்து அருளினார். நமது வைசியர்கள் பிறப்பு என்ற பெருங் கடல் கடந்து—பேரின்பம் துய்த்து ஜீவன் முக்தியுற்று பிரமஹம்சர்களாக, அம்சமிகளாக திகழ்ந்து உண்மையை விளக்கி விளங்கவேண்டும்? என்று ஸ்ரீ வாசவி கடைக்கண்ணால் திருவருள் புரிந்தார்!

பெனுகொண்டாபுரியின் நகரின்கண்ணே அழகாக அலங்கரித்து அன்னை நடந்து செல்வதைக் கண்டு எல்லையற்ற மகிழ்ச்சி கொண்டவராம், அத்திருக்காட்சியை ஆனந்தித்துக் கொண்டிருந்த மக்கள் திடீரென ஆகாயத்தில் தோன்றிய ஒரு பெரும் சத்தத்தைக் கேட்டு அஞ்சி பயந்து கண்காதுகளை இருக மூடிக்கொண்டனர். பக்தியில் திளைதவர்க்கோ ஓர் அற்புதஎண்ணம் உணர்ச்சி உண்டாயுற்று. இது இறை யாகிய வாசவியின் திருவிளையாடல் என அறிந்த் அவர்கள் அன்னையின பாதஸ்மரணையை ஜெபித்தனர். அன்னை ஸ்ரீ கன்னிகாபரமேஸ்வரிதின் திருவருளால் நம் வைசியர் அனைவர்க்கும் ஞான அக்னி உண்டாயிற்று! இவ்வுலகம், இன்பம், துன்பம் பிறவி முதலிய அனைத்தும் கடந்து எல்லையற்ற, நீக்கமற நிறைந்த சத்தியலோக ஜோதிஸ்வரூபமான உலகையும், அழியாத பரிசுத்த தேகத்தையும் அவர்கள் பெற்றனர்.

அப்போது அங்கே நின்றிருந்த மக்கட்கு ஒரு மாபெரும் அக்னி தான்றியது போலவும் அதனுள்ளே வைசியர்களும் அன்னை வாசவியும் மூழ்கிவிட்டது போலவும் தோன்றியது. ஐயோ, நமது பெற்றோர்கள் நம் வாசவியுடன் அக்னி குண்டம் சேர்ந்து விட்டார்கள் என்று வைசிய இளைஞரும் யுவதிகளும் திகைத்தனர். கதறினர். ஒருவருக்கும் தீயில் முதலில் ஒன்றுமே தெரியவில்லை—எரியும் பெருநெருப்பும் விண்ணோக்கி எழும் தீச்சுடர்களுமே இருப்பதாய் தெரிந்தது.

அவர்கள் ''ஹரகர மகாதேவா! ஓம் நமச்சிவாயா!''என்று சிவலோக ஸ்லோகத்தை உச்சரித்தனர்-அன்னை வாசவியையும் துதித்துப் போற்றினர். அருகிலிருந்த மக்களோ ஏதோ அக்னி பூசை என்று மன்னர் பறைசாற்றினாரே—அந்த அக்னி பூஜை தான் இதுவோ! என்று வருந்தினர். ஆனால் இஃதென்ன! அக்னி யே—மடியாகக் கொண்டு அந்த தீயிலே வைசியர்களும் அவர் களின் மனைவிமார்களும் தேவர்களைப்போல பிரகாசத்துடன் குண்டத்திலே உலாவி வருகிறார்களே! நாம் காண்பது கனவா! தீ அவர்களை சுடவில்லையா? அவர்களின்சரீரங்கள் கோடி சூரி யர்களைப் போல் பிரகாசிக்கிறதே! ஆகா இதென்ன அற்புதம்! என்று எண்ணி ஆச்சரியமும் மகிழ்ச்சியும் அடைந்தனர். பக்தி யுடனும், சிரத்தையுடனும் மேலே என்ன நடக்கிறது என்று கண்காணித்தனர்.

அப்போது இராசமகேந்திரபுரத்திலிருந்து சேனைகள் சகிதம் புறப்பட்ட மன்னன் வுஷ்ணுவர்தனன் அந்தநேரம் அங்கு வந் துசேர்ந்தான். ஆகாயம்வரை பரந்துள்ள தீயையும் அதில் மூழ்கி அமர்ந்துள்ள. வைசியக் குலத்தவரையும் கண்டான். மிக்க சினத் தையடைந்தான்'அடே வைசியப்பதர்களே' இப்படியா என்னை வஞ்சித்தீர்கள்? என்று பேய்க் கூச்சலிட்டான்.

அப்போது உலகமே கண்டு நடுங்கும்படியான பயங்கர உரு வத்துடன் கூடிய ஒன்று அவன் எதிரே தெரிந்தது! அவன் கன வில் கண்ட அதே உருவம்! நெருப்புக் கண்கள் இரத்தம் சொட் டும் நாக்கு! யானைத் தந்தம் போன்ற கோரைப்பற்கள்! அந் தஉருவம் அவனைப் பார்த்து கோரக் கூச்சலிட்டது. அரசன் அதைக் கண்டு நடுங்கினான்! உளறினான்! அலறினான்! பேய்க் கூச்சலிட்டான்; இதற்குள் வானின்று ஓர் திருவாக்கு எழுந்தது. ''அடே மூர்க்கா? இன்றுடன் உன் அகங்காரம் ஆணவம் அழிந் தது!''இதைக் கேட்ட மன்னன் நடுங்கி, எழுந்து பின் மூர்ச் சையுற்று விழுந்தான்! அன்னையின்

மாயா சக்தியால் அம்மன்னனின் ஆணவம் ஒன்று சேர்ந்து ஒரு கோர உருவமாக துர்குணங்களுடன் அவனைப் போல தோன்ற ஓர் உருவமாகி, பின பலவாகி, நூறாகி, ஆயிரமாகி, லட்சமாகியது! பின் அதன் சிரசுகள் படீரென வெடித்துச் சிதற உதிரம் ஆறாக ஓடியது அவ் வரசனின் தேவிமாரும் புத்திரனும் ஒன்றும் தோன்றாமல் மயங்கினார்கள். சேனைகள் சிதறி சின்னாபின்ன மாக ஓடியது!

ஆகாயத்திலே தேவர்கள் துந்துபி முழங்கினார்கள்—புஷ்ப மழை பொழிந்தனர். வாத்ய ஒலிகளும், திறிச்சின்ன ஒலிகளும், ஏழு கடல்களையும் பழிக்கும் வண்ணம் எழுந்தன. அதிசயமான பேரொளி ஒன்று தோன்றியது. மத்தளம், முழவு, பேரிகை. தாளம், சங்கம், கச்சரி, சுடாரி முதலான வாத்தியங்களின் முழக்கம் செவிப்பட்டது.

வானிலே இனந்தேசர், துவாதசாகித்தர், ஏகாதசருத்தர். ஸ்ரீ கண்டர், சூடாகர், சத்ருத்தர், அஷ்டமூர்த்திகள், நீலோகிதர் கங்காளகபாலர் அஸ்டபயிரவர், வீரபத்திரன் சக்ரதார், பிருயன் முதலான பதமூர்த்திகளும், உருத்திரர், பிங்கலன், சாந்தன், பாசாத்தன், சுவேதன், ஜயபந்தினை, ஜலாகதகன், ஸ்ரீ தரன், கிரியஷன், திரிலோசனன் முதலிய பதத்தலைவர்களும் சந்திரர், சூரியர், இந்திரரர், முதலான் தேவரும், கணக்கற்ற முனிறர்களும், மகரிஷிகளும் அசுரர், அந்தரர், வானவர், விஞ்ஞைர் வித்தியாதரர், கருபர், கந்தர்வர், யஷிர், கின்னரர், கிம்புருஷர், சித்தர், நிருதர், பூதர், பைசாசர், போகர், உரகர். முதலிய கணங்களும், நந்தி பிருங்கி, வாணர், அந்தகண், கும்போதரன் விருபாஷகன் முலிதயபிரதம கணங்களும், அஷ்டதிக்குப்பாலர் அஷ்டவசுக்களும்: சப்தமருத்துக்களும, நவக்கோள்களும் ஆகிய எண்ணில் அடங்காதவர்கள் துதிசெய்த வண்ணம் வானவீதியில் ஆடியும் பாடியும் களித்தனர்!

அங்குசய், பாசம், மோதகம், கொம்பு ஆகிய நான்கையும் தாங்கிய கரங்களுடன், நீண்ட துதிக்கையும் ஓங்காரத்தை

விளக்கும் யானை உருவத்துடன் உள்ள முகமும் கொண்டு விநா யகப்பெருமான் ஆகுவாகனம் மீது தோன்றினார்.

ஆறு முகங்களும் 12 கரமும் கொண்டு அடியார்களின் பாவங் களைந்து அருள்மொழி தந்து ஈடேற்றும் முருகப்பெருமான் இச்சைகிரியாகிய வள்ளி தேவயானை சகிதம் ஞானவேலுடன் மயில்வாகனம் மீது தோன்றினார்,

ஆறு பிறையும், ஜடையும் நீறுபூசிய நெற்றியும், முக்கண்களும் காளகண்டமும், சதுர்ப்பஜங்களும், 'தமருகமும், மானும், மழுவ: சூலம், புலியகளும், யானைபுரி, நாகபூஷனம், அக்கமணிமாலை முதலிய திருக்கோளங்களுடன், சர்வமங்கள சக்தியான் திருமேனி யுடன், அன்னை உமாதேவியாருடன் ஸ்ரீ நாகேஸ்வராப்பெரு மாள் தமது இடபவாகனத்தின் மீது தோன்றினார்.

நவரத்னங்கள் பதிக்க கிரீடமும், திருமண் தரித்த நெற்றியும் மகா குண்டலம் அணிந்த செவிகளும், கருணை ததும்பும் திருமுக மண்டலமும், சங்கு, சக்கரம், கதை, சார்ங்கம். வாள் ஆகிய பஞ்ச ஆயுதங்களைத் தாங்கியும், பொலியும் நான்கு திருக்கரங்களுடன் துளசி மாலையுகளுடன் மிளிரும் மார்புடனும், பீதாப்பர உடைகள் வீரக்கமலணிந்து திருவடிகளும் மரகதமலை போன்ற சாயையும் பச்சை வண்ணமும் சர்வவியாபக தோற்றமும் கொண்டு ஸ்ரீமன் நாராயணர் ஸ்ரீ தேவி பூதேவி கருடவாகனத்தில் தோன்றினார்

சத்யலோகத்தில் எழுந்தருளி சதுர் வேதங்களையும் உணர்ந்து சகல உலகங்களையும் படைக்கும் சிருஷ்டி தலைவரான நான்முக தேவர் 64 கலைகளின் வடிவமாகிய சாவித்ரீ, காயத்ரீ, சரஸ்வதி தேவிமாருடன் அன்னவாகனம் மீது தோன்றினார்.

அமராவதியின் தலைவன் தேவர் தலைவன் இந்திரன் தனது மனைவியாகிய இந்திராணியுடன் ஐராவதம் என்ற வெள்ளை யாமேல் தோன்றினான். செல்வத்தின் தலைவனும், குபேரபுரி மன்னனும், பரமேஸ்வரன் சிநேகிதனுமான குபேரன் தன் தேவி யாகிய சித்ரரேகையுடன் புஷ்ப விமானத்தில் தோன்றினான்,

நவசக்திகளும், சப்தமாதர்களும். அப்ஸரஸ்த்ரீகளும், நாகக் கன்னியர்களும், அநுசூயை, நளாயினி, அகல்யா முதலிய பல பல உத்தம பதிவிரதாசிரோன் மணிகளும் த்தம் ஊர்திகளில் தோன்றினர், தென்திசைத் தலைவன் யமதர்மராஜனும் பிதிர் தேவதைகளும தோன்றினர்

அப்போது நம் அன்னை வாசவிதேவி பத்மம், பாசம், வீணை கிளி இவற்றை தாங்கிய நான்கு திருக்கரங்களுடனும் வைரத் தோடணியுடனும், தேகம் முழுதும் நவரத்ன ஸர்வனாபரணங்க ளுடன் அதியற்புதமான கிரீடத்துடனும் திருவடிகளில் பொற் சிலம்புகளுடனும், பச்சைபட்டாடைகளும் கோடிசந்திரர்கள் போன்ற கருணை உள்ள திருமுக மண்டலத்தோடு கோடி சூரியர் கள் போன்ற தேக காந்தியோடும் வானவீதியிலே தோன்றி செப் புதற்கரிய பேரொளியோடு விளங்கினார்.

அன்னையின் தரிசனத்தைகண்ட நகரமாந்தர்கள் ஆகா அற்புத மான காட்சி! நம் ஜன்மம் சாபல்யம் பெற்றது; யாம் இனி பிறவித் துன்பம் நீங்கிவிட்டோம்! பண்ணிய பூஜை பலத்தது! குறை தீர்ந் தது! என்று ஆடிப்பாடி மகிழ்ந்தனர். அன்னையை சாஸ்டங்க மாய் விழுந்து வணங்கினர்,

வானவீதியிலே அன்னையின் விஸ்வரூபதரிசனம் கண்ட வைசிய யுவர்களும், யுவதிகளும் கண்குளிரக் கண்டோம். வாசவி! பைரவி லோகமாதா! திரிபுர சுந்தரி! ஜகத்ஜனனீ! விமலீ! மனோன்மணி

கருணாகிரி! கௌரி இருகரங்களை தலைமேல் வைத்து தேவாதி தேவரும். முனிவரும் கடும்தவம் இயற்றியும் காட்சித் தராத அம்பிகையே ! அன்பற்ற இந்த பாவிகட்கு தரிசனம் தந்து எம்மை உய்வித்தாய் ஜகன்மாதா! இனி எம் குலதெய்வ! உம்மையன்றி வேறு எவரும் நாம் குலதெய்வமாக ஏற்கமாட்டோம் ! கருணைக் கடலே! கண்ணின் மணியே ! தெய்வத்தின் தெய்வமே ! மகிடாசூரனை வென்று தர்மத்தை காத்த மகிடாசுர மர்தினியே! சரணம் சரணம் நின்தாளே சரணம் எனப்பலவாறு பாடியும் ஆடியும், அன்னை வாசவி கன்னிகாபரமேஸ்வரியை பிரார்த்தித்தனர்!

விஷ்ணுவர்த்தனின் தேவியும் புதல்வனும் வானளாவி நிற்கும் ஜகத் ரட்சகியாகிய வாசவியை கண்டு 'அன்னையே ! மகாசக்தி லோகநாயகி ! அனைத்து வடிவங்களாகி உலகைக் காத்திடும் ரட்சகி ! ஏழை எம்பால் தயவு கூர்ந்து எம் மன்னன் விஷ்ணுவர்தனனை காத்தல் வேண்டும்! நின் மகிமை யுணராமல் அஞ்ஞான இருளில் மயங்கி எம்மன்னன் செய்த பிழைகளை எல்லாம்மன்னித்து அருளவேண்டும். அம் மன்னனை மீண்டும் தர்மவானனாக மாற்றி அவன் பாவங்களை பஸ்மீகரம் செது அருள்பாலிப்பாய் அன்னையே !' என்று பிரார்த்தனை செய்தனர்,

உடனே அன்னை வாசவி தம் திருக்கண்களால் நோக்க இறந்து கிடந்த விஸ்ணுவர்தனன், உறங்கி கிடந்தனன் போல விழித்தெழுந்தான்! எழுந்ததும் திவ்யஞான உணற்சியைப்பெற்று அங்கிருந்த வைசியர்களை நோக்கி தன் தீயச்செயல்களை மன்னித்து தம் ஆட்சியை அவாகளே ஆளவேண்டும். எனக் கேட்டுக்கொண்டான், பின் ஆகாய வீதியில விண்ணுக்கும், மண்ணுக்கும் இடையில் நிற்கும அன்னையைக் கண்டான் ! பூமியில் தன் உடல் முழுதும் படவிழுந்து வணங்கினான். கண்களில் நீர் ஆறாகப் பெருகி 'தாயே! சர்வலோக ரட்சகி! பிரசன்னவதனி! ராஜீவலோசனி! சந்திரலேகா ! சண்டி! வித்யாரூபிணி! பிரம்மி!

தேவதேவி! பிரஜைகளைக் காக்கும் பிஞ்ஞகி! கிருபாகரி! பிரசன்னவதனி பரமேஸ்வரி! பாகீரதி! வைஷ்ணவி! கோமதி! அனைவருக்கும் காட்சித்தரும் கௌமாரி! பராபரி! இந்த பிறவியின் பிழைகளை மன்னித்து ஈடேற்றவே எழுந்தருளிய ஈஸ்வரி! என்னை என்பாவத்தை போக்கி, காத்து, ரக்ஷித்து ஆட்கொள்வாய் பராசக்தி! என் ஜன்மம் சாபல்யமாயிற்று என் ஆன்மா தூய்மையுற்றது! என் வாழ்வு மேன்மை பெற்றது! எவரும் பெறாத பேறு அடைந்தேன் தாயே! உன் ஒப்பில்லாக் கருணையால் என்பாவம் நீக்கி புது உயிர் பெற்றேன். பொய் உலக வாழ்வை இனி மேற்கொள்ளேன் கமலம் போன்ற கண்களும் அருளமுதம் வீசும் திருவாயும் கேட்கும் வரங்களை தரும் பொற்கரங்களும் கொண்டவளே கன்னிகாபரமேஸ்வரி! சரணம்! சரணம்!' என்று கண்களில் ஆறாக நீர்பெருக ஸ்தோத்தரித்தான்.

அப்போது அபயம் 'அளித்தோம் ; என்று வானத்தில் ஒரு சத்தம் கேட்டது. உடனே மன்னன் நெடுஞ்சான் கிடையாககீழே விழுந்து பக்தி பெருக.

கண்களில் புனல் பெருக வணங்கினான்! பன்முறை விழுந்து வணங்கி தனக்கு ஞானோபதேசம் நல்கும்படி இறைவியை பிரார்த்திக் கொண்டான்! இறைவியும் அதற்கு ஒத்துக்கொண்டாள். பின் விஷ்ணுவர்தனன் 'தாயே இந்த அப்பாவியை வைவைசியர்கள் தீயில் மூழ்கும் காரணம் என்ன நியாயம் நீ அவர்களை உயிர்பெற்றெழ அருள் பாலிப்பாய் ஸ்ரீ வாசவி! நின்னை நான் பழிக்குள்ளாக வேண்டுமா? பழி வராமல் நீ அவர்களை எழுப்புவாய் தாயே! என்று உருக்கமுடன் வேண்டியதுடன் அப்படி எழுப்பாவிடின் நானும் உயிர் தரிக்க மாட்டேன்கருணை செய்வாய் ஜாதீஸ்வரி! என்று பலவாறு இறைஞ்சினான்!

உடனே அன்னை பகன்றாள் 'மன்னா! அவர்கள் எவரும் உயிர் துறக்கவில்லை! தூய ஆத்ம ஜோதியில் ஞானாக்னியில்

கலந்து எல்லையற்ற ஆனந்தம் அடைந்து கொண்டுள்ளார்கள் அவர்கள் பாப விமோசனமும், ஜீவன் முக்தியும். எய்திவிட்டனர் இனி அவர்கட்கு பிறப்பும் இல்லை! பிறவியாகிய சமுத்ரத்தை தாண்டிவிட்டனர்! இதோ இதை அவர்களே உமக்கு பகர்வார்கள்! என்று அவர்களை அவ்வுயர் நிலையிலிருந்து சாதாரண நிலைக்கு வர. செய்வித்தாள் அப்போது அவர்கள் கண் விழுத்தெழுகையில் உலகமெல்லாம் ஜோதி மயமாய் திகழ்வது கண்டு ஆனந்த வெள்ளத்திலே மூழ்கி அன்னையே ஜகத்ஜனனீ!
ஒப்பற்ற இறைவி! நினைத்தாலும், படித்தாலும், கேட்டாலும் பாடினாலும், உள்ளமெல்லாம் தித்திக்கும் ஓங்காரி, நாயகி, கருணைவடிவே, கௌமாரி. வைசியர்குறைதீர்க்க வந்த வாசவி கன்னியருக்கு கலங்கரை விளக்கமாகி வந்த கன்னிகாபரமேஸ்வரி இராம அவதாரத்திலே ஜானகியாக, விஷ்ணுவின் நாயகியாக மகேஸ்வரரின் பத்தினியாக, அனைத்தும் ஓர் வடிவாய் காட்சி தரும் ஆதிபராசக்தியே! எமக்குக் கிடைத்த பெருநிதியே! கோடையிலே இளைப்பாறிக் கொள்ளும் பெருமரமே! குளிர்ந்த நீருற்றே, மேடையிலே வீசுகின்றதென்றல் காற்றே. வேதாந்த நிலை விளக்கும் தாதாந்த ஸ்ருபமே! மெய்ஞானமழவே! மூன்று வயது பாலகனாகிய சுந்தரனுக்கு ஞானப்பால் அளித்த கருணை வடிவே! சன்மார்க்க நிதியே! கருணை பொழில் வானமே! நின் அருளை என்னென்று புகழ்வது எமக்கு உண்மை ஞானத்தை தருவாய் அம்மா! பராசக்தி! லோகமாதா! என்று பலவாறு பிரார்த்தனை செய்தனர். அது கண்ட இதர மக்களும் எல்லையற்ற பெருங்களிப்பு எய்தினர்.

# அத்தியாயம் பதினைந்து

கூறற்கரிய கருணையுள்ள அன்னை வாசவியை யாவரும் புகழ்ந்துக் கொண்டிருக்கும் போதே தனது திருவருளால் அந்த இடத்திலே கண் சிமிட்டும் நேரத்தில் ஓர் அற்புத மண்டபத்தை அன்னை சிருஷ்டித்தாள்!

கண்டோர் வியக்கும் கவினுறும் எழிலாக சிருஷ்டித்தாள். செம்பொன் தேவர்களும், நீலமணிகள் ஒளிவீசும் யானைகளும் சிங்கங்களும் யாளிகளும் அழகை பொழிந்தன. பளிங்குச்சுவரும் மரகதசாளரமும் செம்பவளத் தூண்களும் இந்திர நிலப் பொதிகைகளும், ரத்ன விட்டமும், பொன் உந்திரமும், சந்த்ர காந்த கல்லாலான மேற்கோப்பும் சிறந்த பேரெழில் பெற்று விளங்கின. எத்துனை மக்கள் வரினும் தாராளமாய் இருக்கும்படி ஏழு அடுக்கு மாடிகளுடன் அவ்வற்புத மண்டபம் அழகுற அமைந்து இருந்தன!

அத்தகு மண்டபத்தில் முத்தினாற்பாளைகளும், மரகதத் தாற் பச்சிலைகளும், பவழப்பழங்களும் வெள்ளியால் செய்த கமுகுகளும், மரகதப் பொன் கனிகளும், உள்ள கதலிகளும் நாட்டப்பட்டு வண்டுகள் பாட, தேன சிந்தவும் தென்றல் சாளர வழியே வீசி வருக வருக! என வரவேற்கவும் செய்தன ! பைம் பொழிலும் குளிர்தருக்களும் மலர்செடிகளும் பூக்கொடிகளும் கொண்டு விளங்கின. யாகசாலை, ஹோம குண்டம் நியமப்படி அமைக்கப்பட்டிருந்தது. வாசனைச் சந்தனமும், குங்கும பூ ஜவ்வாது முதலிய வாசனைப் பொருட்களின் வாசம் சிந்தையைக் கிள்ளியது.

மண்டபத்தில் அமர பிரம்பம் பாய்கள், ரத்னகம்பளங்கள், மேல் விரிப்புகள் முதலியன விரிக்கப்பட்டிருந்தன. நவரத்ன சிம்மாசனமும்! அழகான தங்க ஆசனங்களும் அமைக்கப்பட்டி ருந்தன. அங்கே பல்வித சிற்றுண்டிகள் பஞ்சாமிர்தம் அறு சுவை கனிவர்கங்கள், சந்தனம், புஸ்பம், பன்னீர், தாம்பூலம் முதலியன தக்க இடங்களில் வைக்கப்பட்டிருந்தன. கங்கை, காவிரி, யமுனை முதலிய புண்ய தீர்த்தங்களும் ஏனைய அனைத்துப் பொருட்களும் தயாராக வைக்கப்பட்டிருந்தன.

வானவீதியிலே நின்றிருந்த நம் வாசாம்பிகை உடனே அம் மண்டபத்துள் சார்ந்து எல்லா ஜனங்களையும் அவரவர்க்கு தக்க ஆசனங்களில் அமர்த்தினார். மோட்சத்தை எய்திய பெரி யோரும் ' தேவாதி தேவரும் , மகிரிசிகளும் அப்சரஸ்திரீகளும் கருட கந்தர்வ கின்னா கிம்புருஷாதி பூதகணங்களும் மும்மூர்த்தி களும் அஷ்ட திக்குபாலரும் யாவரும் மேல் மாடியில் தத்தம் இருக்கையில் அமர்ந்தனர்.

அப்போது அம்பிகை விருபாட்சனை அழைத்து வந்து அரி யாசனத்தில் அமரச்செய்தார். அன்னையின் அனுக்கிரகத்தால் விருபாட்சனும், அமைச்சரும் சேவகரும் சேனாதிபதிகளும், பட் டாபிஷேகத்திற்கு தக்க உடைகளும் வந்திருந்தனர்.

வேத விதிப்படியாக விதிகள் பிரும்ம தேவரை வைத்துக் கொண்டு நடைபெறச் செய்தனர். வேத கோஷங்கள், யாக பூசைகள் அனைவரும் போற்றும்படி நடந்தது. புகை ஆகாயத் தை தாண்டியது.. நாதரின் யாழொலியும் சரஸ்வதியின் வீணை இசையும் பானுகம்பனி பானாசுரன் முதலியோரின் உடுக்கை யொலிகளும் அனைவரின செவிகளிலும் இன்பத்தை பாய்ச்சின சுபயோக சுபலக்கினத்தில் அதிகாலை ஸ்ரீ வாசவி தேவியார் தம் திருவருளால் உண்டான நவரத்தின கிரீடத்தை

திருக்கரத்தால் எடுத்து . வைசிய உலகம் பல்லாண்டு சிறந்து விளங்கி உலக மக்கட்கு ஷேமத்தை தருவதாக ! என்று வாயார வாழ்த்தி உலகம் மங்களம் சிறந்து எல்லா உயிரும் இன்புறுமாறு திருவருள் பாலித்து விருபாட்ச செல்வனின் திருமுடியில் சூட்டி பட்டாபிஷேகம் செய்வித்தார். சகல வாத்தியங்களும் தேவ துந்துபிகளும் முழங்கின. தேவர்கள் மலர்மாரி பொழிந்தனர். ஆன்றோர் ஆசி கூறினர். எங்கும் மகிழ்வும் வாத்ய ஒலிகளும், மங்களஆசிகளும் நறுமலர் மழையும் உண்டாகி எல்லையற்ற ஆனந்தம் உண்டாயிற்று.

பாடல் பாடுவோர், ஆடுவோர், ஆகியோரின் நிகழ்ச்சிகளும் விஷ்ணுவர்த்தன மன்னனும் அவனது பத்தினிகளும் நட்பினரும் 56 தேச மன்னரும், வீரர்களும் உத்தமரும் யாவரும் உளம் குளிர்ந்து கண்டு உவகையால் வியந்து புகழ்ந்தனர்.

எங்கும் மங்கள ஒலி! எங்கும் நம் வாசவியின் பிரார்த்தனை எங்கும் சத்தியின் பொழிவு! எங்கும் அன்பு மயம் இன்ப ஒளி!

மங்கலங்கள் பொங்குக! ஐஸ்வர்யம் பெருக! தர்மம் தழைக்க சத்தியம் நிலைக்க! ஆனந்தம் தழைக்க! என பார்வதி பரமேசுவரரும்' நான்முகனும் ஸ்ரீமன் நாராயணனும், தேவாதி தேவரும் வாழ்த்தினர். 102 கோத்திரத் தலைவர்களும் வைசியர்கள் புகழ் வாழ்க! வாசவாம்பிகை வாழ்க! ஆசாரம் சிறக்க த்யாகம் பொலிக! வீரம் வளர்க ! என்று பலவாறு வாழ்த்தினர்.

எங்கும் ஜெய கோஷம்
அன்னை வாசவிக்கு ஜே!
வைசிய குல தேவிக்கு ஜே!
தர்மஸ்தாபனம் செய்த தேவிக்கு ஜே!

ஸ்ரீ கன்னிகா பரமேஸ்வரிக்கு ஜே !
வேத வித்தகிக்கு ஜே !
பதினாறு புவனத்தையும் காக்கும் தேவிக்கு ஜே!

என்ற கோஷம் விண்ணிலும் மண்ணிலும் முழங்கியது!

அப்போது நமது குலதெய்வமான ஸ்ரீ வாசவி தேவியார் தம் திருவாயைத் திறந்து பல அருள்மொழிகளை உரைத்தார் ' என் அருமை வைசியப் பெருமக்களே நீங்கள் ஸ்ரீ பரமேஸ்வரனையும் ஸ்ரீமன் நாராயணனையும் என்னையும் என்றும் மறவாது பூசிக்க வேண்டும். நாங்கள் மூவரும் வெவ்வேறு தெய்வங்கள் அல்ல! அதை நான் எடுத்தியம்ப தேவையில்லை நீங்கள் உங்கள் பிதாகள் செய்த எத்தொழிலை செய்யினும் இறைவன் பலத்திலே செய்ய வேண்டும் அத்தொழில்விரைவில் முன்னேறும் உமக்கும் மனச் சஞ்சலமும் வருத்தமும், நேராது நீங்கள் பக்தி, ஞானம், நீதி நேர்மை, தர்மம், வியாபாரம், வீரம், தீரம், வைராக்யம், தேச சேவை தியாகம், சாந்தம், ஒழுக்கம் பொறுமை, சன்மார்க்கம், ஆகியவைகளை உயிருக்கு மேலாக காக்கவேண்டும். உங்களால் உயிர்கள் ஷேமங்களையும் நன்மைகளையும் உண்டாக வேண்டும். என்று கூறி தன் அருளால் செய்த அருட்கொடி ஒன்றை அவர்கட்கு தந்து வைசிய இளைஞர்களே யுவதிகளே, நீங்கள் இக்கொடியை அதி ஜாக்கிரதையாகக் காப்பாற்றவேண்டும். என் ஞாபகார்த்தமாக நான் வழங்கும் உயர்ந்த பொருள் இதுவே ! உமக்கு சகல நன்மைகளையும், தேஜஸ்ஸையும் வீரத்தையும், கொடுப்பது இது ! இதிலே அநேக தவங்கள் பொருந்தியது.

என் திருவருளால் உலகில் நன்கு வாழுங்கள் ! வேதாந்த தர்மங்களை விடாது காப்பாற்றி, காமதேனுவின் அம்சமாகிய

பசுக்களை காத்து, சகல உயிர்கட்கும் உணவு ஊட்ட வேண்டிய விவசாயத்தை செவ்வனே நடத்துங்கள். வாணிக்கத்தை நன் முறையில் விருத்தி செய்யுங்கள் அந்நிய தேசங்களிலும்அபிவிருத் துசெய்து நற்பெயர் எடுங்கள். கப்பல் வியாபரம் நன்கு காப்பின் மின் தர்மத்தை தவறாமல் வாணிகம் செய்து கணக்கற்ற செல் வங்களை திரட்டி சத்யத்தை நிலை நாட்டுங்கள். உலகம் முழு தும் நன்மை செய்யுங்கள் சத்திய வாழ்வை நடத்தி பலன் முழு தும் விடுபட்டு பேரானந்தம் அடைந்து இன்புறுங்கள்.

எவன் இவ்வுலகம் ஷேமமாக வாழவேண்டும் எனக் கருதி விவசாயம் செய்கிறாரேன அவன் உழும் கலப்பையின் கொழு முனையில் நான் பிரசன்னமாயுளளேன்.அது போல தர்ம வாணி கம் செய்து, மக்கட்கு சரியான எடைக் கற்களையும் பண்டங்க ளையும் வழங்கும் தாரசு முனையிலும் படியிலும் நான் பிரசன்ன மாய் இருக்கிறேன்! உயர்ந்த கலைகளிலே, இசையிலே, ஞான மார்க கலைகளிலே, உயர்ந்த கவிகளிளே நான் இருக்கிறேன்,

உயர்ந்த தேசபக்தியிலே, தேசிய சேவை செய்யும் மாந்தர் கள் மனதிலே நான் வாசம் செய்கிறேன். பரம்பிரும்மத்துள் நன்மைக் காட்டும் சிற்பங்களிலே சித்ரங்களிளே நான் நிறைந்த இருக்கிறேன். தர்மத்திற்காக யுத்தம செய்யும் படை வீரனின் ஆயுத முனையிலே நான் குடியுள்ளேன் - எவ்வுயிருக்கும் நன்மை புரியும் அரசனின் செஙகோலிலே நான் குடியுள்ளேன் தர்மத்தை செய்து கொடுத்து இல்லாதவருக்கு வாரி வழங்கும் பொன்மனச் செமமல்களின் கரங்களின் கரங்களிலே நான் வாழ்கிறேன்.

ஞானோபதேசம் செய்யும் யோகிகளின் நாவிலே நான் இருக் கிறேன். எங்கே சோம்பலின்றி தொழில் நடக்கிறதோ.

எங்கே ஆட்சி செய்கிறதோ, எங்கே நீதியும், வீரமும். பக்தியும் மிளிர்கிறதோ அங்கெல்லாம் நான் இருப்பேன் ! ஆதலால் நீங்கள் உலக சேவைசெய்யுங்கள்! தேசபக்தி செலுத்துங்கள்! அருட்பணி புரியுங்கள் ! தர்மத்தை நிலை நாட்டுங்கள் இதற்காகவே நீங்கள் ஜனித்தீர்கள். உடல், பொருள், ஆவி மூன்றும் அந்த உத்தம லட்சியத்துக்கு தியாக தீயில் ஆகுதியாக்க எப்போதும் தயாராக இருங்கள்!

ஆசாரசீலர்களாய். கல்வியில் கரைகண்ட ஞானிகளாய் உத்தமர்களாய் பேதமை நீக்கிய பெரியோராய், மானங்காக்கும் மாண்புடையவராக, கற்புடையவராக, கற்புடைய மங்கையரை மணந்து இல்வாழ்க்கை நடாத்தும் கண்ணியராய் விருந்தோம்பு கிறவராய் பல்லுயிர் பேணும் தகைமை உடையவராய் தர்மஸ்தாபகராய் அகிம்சா பரம தர்மத்தை காக்கும் தகையோராய் வாய்மையில் தூய்மையுள்ளவராக தோன்றி வைசியர்களே இவ்வுலகிற்கு புகழை நாட்டுவீர்களாக தோன்றி வைசியரால் உலகம் இன்பம் பெறுக ! என்று ஞானோபதேசம் செய்த நம் அன்னை கன்னிகா பரமேஸ்வரி தேவியார். விஷ்ணுவர்தனனுக்கும் தக்க ஞான உபதேசம் செய்தார்.

பின் நம் அன்னையின் வடிவம் ஒன்பது ஜோதிப் பிரிவுகளாக மாறியது ! ஒன்று சரஸ்வதியிடமும், ஒன்று திருமகளிடமும், ஒரு கதிர் பார்வதியிடமும். ஒன்று மனோன்மணியிடமும். ஒன்று நாததத்துவத்திடமும் ஒன்று ஆதிசக்தியிடமும் ஒன்று பரமேஸ்வரனிடமும் ஒன்று நாராயணமூர்த்தியிடமும் சென்று ஐக்கியமானது அப்போது ஆகாய வீதியில் நின்ற தேவர்களும் மகரிஷிகளும் ஏனைய கணங்களும் அந்தர்யதாய் விட்டது.

அனைவரும் இந்த காட்சிகளைக் கண்டு பேரானந்தம் எய்தி 'அற்புதம்' என ஆராதித்தனர், வைசியர்கள் அம்பிகையின் திருவடிகளை மனமொழிகளால் வாழ்த்தி தோத்தரித்தனர்.

பின் அவர்கள் ஆலயம் சென்று ஸ்ரீநகரேஸ்வரப் பெருமா னுக்கும் ஸ்ரீ ஜனார்தன மூர்த்திக்கும் அபிஷேக ஆராதனைகள் புரிந்து வழிபட்டு வாழ்த்தி தம் வீடுகளையடைந்தனர்.

ஜீவன் முக்தியெய்திய பெரியோர்களும் அகந்தையழிந்து புனர்ஜன்மம் எடுத்து அம்மையின் அருள் பெற்ற விஷ்ணு வர்த்த னனும் யோகானுபவத்தில் ஈடுபட்டு ஒப்பற்றமோனசமாதி நிலை யில் பேரானந்தம் அனுபவித்தனர்.

பின் விருபாட்ச மன்னன் தனது அமைச்சரவை, சேனைகள் சகிதம் விஷ்ணுவர்தனின் வேங்கிநாடு சென்றான், அங்கு விஷ்ணுவர்தனின் மகன் ராஜராஜனுக்கு பட்டாபிஷேகம் செய் வித்து தனது பிரதிநிதியாக இராஜ மகேந்திரபுரத்தை ஆண்டு வரும்படி அந்த நாட்டை ராஜராஜன் வசம் ஒப்புவித்தான்.

பிறகு தன் நாடு திரும்பினான் விருபாட்சன் அரசவை காரி யங்களிலும், தரும காரியங்களிலும் ஈடுபட்டு ஆன்ம விசாரணத் துடன் தன்நாட்டை இனிதே நல்லவர்கள் எல்லாம் போற்ற ஆண்டுவந்தான்.

தன் இணையற்ற நண்பனும் வேங்கி நாட்டு மன்னனுமான ராஜ ராஜனை கலந்தாலோசித்து அன்னை வாசவி தேவிக்கு ஆலயம் அமைக்க விரும்புனான் விருபாட்ச மன்னன். நல்ல சுப தினத்திலே சுப வேளையிலே அம்பிகையின் பேரருளால் அஸ்தி வாரம் செய்து கோயில் திருப்பணி வேலையைத் தொடங்கினார் ஆலயத்துக்கு அதை கட்ட திட்டமிட சான்றோர்களைஅழைத்து வந்து கட்டிடக் கலைஞர், சிற்பக் கலைஞர், திருப்பனிக் கலைஞர் முதலியோருடன் கலந்து மதில்கள், குளங்கள் கிண றுகள், கோபுரங்கள். அத்தாணி மண்டபம், அர்த்த மண்டபம் சபாமண்டபம், ஒருகால் மண்டபம் இருகால், நாலுகால்,

பத்துகால் மண்டபங்கள் பன்னிரு, பதினாறு கால் மண்டபங்களையும், ஆயிரம் கால் மண்டபங்களையும், நூற்றுக்கால் மண்டபம், கல்யாண மண்டபம், பள்ளியறை, துவஜஸ்தம்பம் முதலியவையும் சாத்திர சம்பிரதமாய் சமைத்து, மூலத்தானத்தில் ஸ்ரீ வாசவியின் திருவுருவத்தை பிரதிட்டை செய்து அன்பர் இடம் சென்று அனுக்கிரகிக்க வெளியில் புறப்பட்டுச் செல்ல திருவருளைப் பொழிய உற்சவ அம்மனுக்கு தனியிடம் அமைத்து, வேண்டிய வாகனங்கள், ரதங்கள், விமானங்கள் இதர தேவையான பொருட்களையும் தயார் செய்து ஆறு கால பூஜைகளும் அனைத்து உற்சவங்களும் எக்காலமும் தவறாமல் நடைபெற தக்க முன்னேற்பாடுகள் செய்து ஒரு சுப முகூர்த்தத்தில் கும்பாபிஷேக வைபவத்தை வெகு சிறப்பாக நடத்தி வைத்தார்கள்.

ஆண், பெண், சிறுவர், சிறுமியர். முதியோர் அனைவரும் திரண்டுவந்து ஸ்ரீவாசவாம்பிகை மனங்குளிர வாழ்த்தி ஸ்தோத்திரம் செய்து பாடியும் ஆடியும் ஆனந்தக் கண்ணீர் பொழிய அன்னை ஸ்ரீ கன்னிகாபரமேஸ்வரியின் திருவிளையாடல்களை புகழ்ந்து கொண்டாடி சந்தோஷ சாகரததில் திளைத்துக்கொண்டிருந்தனர்!

'ஓம் ... ...ஸ்ரீவாசவி கன்னிகா பரமேஸ்வரி மாதாகி ஜேய்! ஸ்ரீ வாசவி ஜனனம்' என்ற தெய்வீக திருக்காவியம் நிறைவுறுகிறது.

அருள்மிகு அன்னை வாசவியின் புகழ் வாழ்க!
வைசிய பெருமக்களின் செல்வமும் தர்மங்களும் வளர்க!
சத்யமும், தர்மமும் ஓங்குக!
இவ்வுலகம் சமாதான பூங்காவாக திகழ்க!

முற்றும்.